# கல்கி

KALKI 2.5.93 ரூ. 3.00



ஜெயஸ்ரீ:

இசை உலகில் இன்னொரு நட்சத்திரம்



வியர்வை...
MEDICATED
Shower to Shower
PRICKLY HEAT POWDER
COLOGNE COOL
விந்தையூட்டும் வியர்வையின் எதிரி.
வியர்வையினால் உருவாகிறது வேர்க்குரு. எனவே வியர்வையை வெறுப்பதைவிட ஷவர் டு ஷவர் கொண்டு வேர்க்குருவை எதிர்த்திடுங்கள். நறுமணமுள்ள, வியர்வையின் எதிரி இது. இதன் செயல் பிரமிக்க வைக்கும் உங்களை. எனவே, வியர்வையை ஒழித்து, வேர்க்குருவையும் ஒழிப்பீர் — ஷவர் டு ஷவர் கொண்டு.
இலவசம்
ஷவர் டு ஷவர்-கோலோன் கூல் சாம்பிள் பேக் ஒன்று இந்த இதழுடன்.



கல்கி



1993
மே 2
மலர் : 51
இதழ் : 40
ஸ்ரீமுக
சித்திரை 19

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்றுகும்பிடடி
பாப்பா. -பாரதியார்.

# சரித்திரம் படைக்கும் சட்டமன்றம்!

மெஜாரிடி பலம் பெற்று ஆட்சியில் இருப்பவர்களும் அவர்கள் ஆதரவோடு சபாநாயகர் பதவியில் அமர்கிறவர்களும், 'மக்கள் பணிபுரிய வந்திருக்கிறோம்' என்பதை மறவாமல் அடக்கத்துடன் செயலாற்றுவது தான் நல்லது. அதிலும் சபாநாயகர் நடுநிலை தவறாமல் இருதரப்பினரையும் அணைத்துப் போக வேண்டிய பெரும் பொறுப்பில் இருக்கிறார்.

சமீபத்தில் தமிழக சட்டமன்றத்தில் சபாநாயகர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் காங்கிரஸ் கட்சி கொண்டு வர அதன் நோக்கில் போதிய காரணங்கள் இருந்திருக்கின்றன. தீர்மானம் கொண்டு வரப்படும் சமயம் துணை சபாநாயகர் தலைமையில் அவை இயங்கியது சிறந்த மரபுதான். நம்பிக்கை இல்லாத் தீர்மானத்துக்கு ஆதரவாக 35 உறுப்பினர் எழுந்து நிற்கவும் தீர்மானத்தைப் பிரேரேபிக்கலாம் என்று துணை சபாநாயகர் அழைத்ததும் விதிமுறைகளையொட்டிய செயலே. முன்மொழிந்து அமர்ந்ததும் சில வினாடிகள் காத்திருந்து, அதனை யாரும் வழி மொழியவில்லை என்று கண்டதும், 'தீர்மானம் தள்ளுபடி செய்யப்படுகிறது' என்று துணை சபாநாயகர் அறிவித்தது விதிமுறைப்படி சரியே தவிர, தர்ம நியாயமாகாது. மரபுப்படி வழிமொழிதல் வேண்டும் எனில் முன்மொழிய அழைத்தது போலவே வழிமொழியவும் அழைத்திருக்கலாம். மரபு தெரியாதவர்களுக்குச் சொல்லிக் கொடுத்ததாகவும் இருந்திருக்கும். ஆனால் தீர்மானத்தையே தள்ளுபடி செய்து, விவாதமே நடக்க முடியாமல் தடுக்கும் போது பேச்சுரிமையை, அதிலும் மக்கள் பிரதிநிதிகளின் பேச்சுரிமையை ரத்து செய்ததாகிறது.

காங்கிரஸ் தரப்பிலும் தவறு நடந்துதான் இருக்கிறது. 'சபை நடவடிக்கைகளுக்குத் தடங்கல் செய்வதே இவர்கள் திட்டம்' என்ற குற்றச்சாட்டுக்கு ஆளாகாதபடி இந்த சட்டசபைத் தொடரின் ஆரம்பத்திலிருந்தே நடந்து கொண்டு, இடையூறுகள் விளைவிப்பதை விட அதிகமாக கருத்துச் செறிவு மிக்க விவாதங்களில் கவனம் செலுத்தியிருக்கலாம். மேலும், ஒரு தீர்மானத்தைக் கொண்டு வரும் போது - அதிலும் யாருடன், எப்படிப்பட்டவர்களுடன் மோதுகிறோம் என்பது தெரிந்திருக்கும் போது - முன் மரபுகளை ஆய்ந்து ஒத்திகை பார்த்துக் கொண்டு வந்திருக்க வேண்டும். செய்யவில்லை. இது தவறுதானே தவிர குற்றமில்லை.

எப்படியிருந்தாலும் இந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானம் தோற்றுத்தான் போயிருக்கும் என்னும் போது ஒரு 'டெக்னிக்கல்' தவறைக் குற்றமாக்கி, தீர்மானத்தின் மீது விவாதமே இல்லாமல் செய்து விட்டது துரதிர்ஷ்டமாகும். 'விமர்சனங்களைத் தாங்கிக் கொள்ளும் சகிப்புத் தன்மை இல்லை' என்ற விமர்சனம் எழ இது இடமளித்து விட்டது.

இதன் பிறகு ஆளும் கட்சி உறுப்பினர் ஒருவரின் துணிவு மேலும் அதிகரிக்க, ''போடா வெளியே'' என்ற குரல் சட்டமன்றத்தில் ஒலித்திருக்கிறது. சபாநாயகரும் இதைக் கண்டித்திருக்கிறார். குரல் எழுப்பியவர் யார் என்று திட்டவட்டமாகத் தெரியவராத போது முதல்வரே அவர் சார்பில் வருத்தம் தெரிவித்திருந்தால் பண்பில் உயர்ந்திருப்பார். அதைச் செய்யாது போக, உறுப்பினரின் தகாத சொல்லைக் கண்டித்தும் ஆளும் கட்சியினரின் எதேச்சாதிகார நடவடிக்கைகளை எதிர்த்தும் காங்கிரஸ் மற்றும் ஆதரவாளர்கள் சட்டசபைக்குள்ளேயே தர்ணா நடத்தும் வரலாறு காணாத நிகழ்ச்சியும் நடந்தேறியுள்ளது. இந்த தர்ணாவின் போது கூட பெருந்தன்மை காட்டப்படவில்லை என்பதும் தர்ணா செய்த சட்டமன்ற உறுப்பினர்கள், கதவுகள் அடைக்கப்பட்டதாலும் மின் சப்ளை நிறுத்தப்பட்டதாலும் இருட்டிலும் புழுக்கத்திலும் அவதிப்பட நேர்ந்தது என்பதும் மிகுந்த மனவருத்தமளிக்கும் செய்திகள். தொடர்ந்து எம்.எல்.ஏக்கள் வெளியேற்றப்பட்டதும் சாலை மறியலையொட்டி கைதானதும் அதைவிட வேதனை.

சட்டமன்றம் என்பது மக்கள் மன்றமாக, சுதந்திரமும் பொறுப்புணர்வும் செங்கோலோச்சும் இடமாக இருக்க வேண்டுமே தவிர, யதேச்சாதிகாரப் போக்கின் கொலு மண்டபமாகவும் முட்டுக்கட்டை மன்னர்களின் சபா மண்டபமாகவும் மாறி விடக் கூடாது.

பெண்ணுரிமை பற்றி +2 மாணவர்களுக்குக் கட்டுரை எழுதும் முதல்வர் முதலில் எம்.எல்.ஏக்களின் உரிமைகளை மதிக்கக் கற்றுக் கொள்ளட்டும்.

# ஜெயஸ்ரீ: இசை வானில் இன்னொரு நட்சத்திரம்



"ஒரு பாட்டு கத்துக் கறியா....?"

"ம்... சரி..." உடன் கொண்டு வந்திருந்த சிறிய நோட்டுப் புத்தகத்தில் பாட்டை எழுதிக் கொள்ளத் தயாரானாள் மாணவி.

"ம்ஹூம்.... எழுதிக் காதே! முதல்ல கேளு...."

குரு பாடினார். வாகதீச் வரி ராகத்தில் 'பரமாத்முடு...' என்ற கீர்த்தனை....

கீர்த்தனைக்கு அர்த்தம் சொன்னார். ராகத்துக்கும் பொருள் இருக்கிறது என்று விளக்கினார். ஒவ்வொரு அடியையும் திரும்பத் திரும்பப் பாடும் போது சங்கதிகளில் ஒலித்த உணர்ச்சி வேறுபாடுகளை அடையாளம் காட்டினார். ஸ்வரங்களின் ஒலியைத் தொண்டையில் எழுப்புவதற்கு அப்பாலும் சங்கீதத்துக்கு ஆழமும் அகலமுமான ஒரு பிரும்மாண்ட பரிமாணம் இருப்பதை அந்த முதல் வகுப்பில் உணர்த்தினார்.

ஒரு விசுவரூப தரிசனம் பெற்ற பிரமிப்பு உண்டாயிற்று மாணவிக்கு...

*மாணவி : பம்பாய் ஜெயஸ்ரீ*
*குரு : லால்குடி ஜெயராமன்*

உண்மையைச் சொல்ல வேண்டுமானால், இன்று ரொம்ப 'பிஸி'யான இளம் கலைஞர் வரிசையில் இடம் பெறும் ஜெயஸ்ரீக்கு அன்று அந்த முதல் வகுப்பு அனுபவம் ஏற்படும் வரை கர்நாடக இசையின் பேரில் பிரமாதமான ஈடுபாடு இருக்கவில்லை.

"முழுக்க முழுக்க பம்பாயில் தான் வளர்ந்தேன். எங்கள் குடும்பத்தில் மூன்று தலைமுறைகளாகப் பாட்டு ஒலித்துக் கொண்டிருக்கிறது. என் குரல் வளத்தின் மீது அம்மாவுக்கு ரொம்ப நம்பிக்கை. பம்பாயில் டி.ஆர். பாலாமணியிடம் முறையாக கர்நாடக இசை கற்றுக் கொண்டேன். கச்சேரிகள் செய்யும் அளவுக்கு முன்னேறினேன். ஆனாலும் அந்த சங்கீதத்தின் அருமை பெருமைகள் எனக்கு வசமாகவில்லை. ஹிந்துஸ்தானி இசையும் கற்றுக் கொண்டேன். அதில் ஈடுபாடு கொஞ்சம் அதிகமாகவே இருந்தது...."

இதெல்லாம் சென்னைக்கு ஒரு கச்சேரிக்காக வந்த ஜெயஸ்ரீ, லால்குடி ஜெயராமனிடம் மாணவியாகச் சேரும் வரை தான். குடும்ப நண்பரான அவர் ''ஒரு மாசம் இங்கே தங்கி பாட்டு கற்றுக்கொள்'' என்றார். ஜெயஸ்ரீயின் முதல் வருப்பு முடிந்து நான்கு வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. அவர் இன்னும் பம்பாய்க்குத் திரும்பவே யில்லை.

தென் சென்னையில் ஒரு காலனியில் பிள்ளையார் கோவில். பம்பாய் ஜெயஸ்ரீயின் கச்சேரி. குறுகலான இடத்தில் நெருக்கியடித்து உட்கார்ந்திருக்கும் பெரியவர்கள்; பக்கத்து வீடுகளின் மதில் சுவர்களில் உட்கார்ந்தபடி மாணவர்கள்; வீட்டிலிருந்து மடக்கு நாற்காலிகள் எடுத்து வந்து தெரு ஓரத்தில் போட்டுக் கொண்டு அமர்ந்துள்ளவர்கள்... உன்னிப்பாகக் கேட்கிறார்கள். 'மத்ய மாவதி' ராக ஆலாபனை முடிந்ததும் இலேசாக சலசலக்கும் விமர்சனம் : ''லால்குடி ஸ்டைல் நிறைய இடத்துல தெரியறதில்ல....?'' அரை இருட்டிலும் அந்த ரசிகர்களின் முகத்தில் ஒளிரும் திருப்தி....

''இன்னாரின் சிஷ்யை என்றதுமே ரசிகர்களின் எதிர்பார்ப்பு அதிகமாகிவிடுகிறது. 'எவ்வளவு பெரிய பொறுப்பு இது' என்று மலைப்பு வரும். ஆனால் இந்த கர்நாடக சங்கீதத்தைப் பாடறதுல ஒரு பெரிய அனுகூலம். அத்தனை ராகங்களும் பாட்டுகளும் ஏற்கெனவே பாடிப்பாடி மெருகேற்றப்பட்டவை. ரசிகர்களின் மனத்தில், உணர்வில் கலந்து போனவை.......''



'ரசிகர்களின் எதிர்பார்ப்பு பற்றி...' ஜெயஸ்ரீயிடம் கேட்கிறோம்.

''இன்னாரின் சிஷ்யை என்றதுமே ரசிகர்களின் எதிர்பார்ப்பு அதிகமாகிவிடுகிறது. 'எவ்வளவு பெரிய பொறுப்பு இது' என்று மலைப்பு வரும். ஆனால் இந்த கர்நாடக சங்கீதத்தைப் பாடறதுல ஒரு பெரிய அனுகூலம். அத்தனை ராகங்களும் பாட்டுகளும் ஏற்கெனவே பாடிப்பாடி மெருகேற்றப்பட்டவை. ரசிகர்களின் மனத்தில், உணர்வில் கலந்து போனவை. அத்தகைய பாட்டுக்களை நாம் திரும்பப் பாடும்போது பாதி வெற்றி அந்தப் பழைமைக்கே கிடைத்து விடுகிறது. உதாரணமாக 'நன்னுபா... லிம்ப....' என்று ஆரம்பிக்கும் போதே சபையில் ஒரு சின்ன சலசலப்பு ஏற்படுவதை உணர முடிகிறது...

''அப்புறம் இளைய தலைமுறையைச் சேர்ந்தவளாக இருப்பதும் அனுகூலம். கச்சேரியின் இடையே தவறுகள் செய்திருக்கிறேன்; 'இன்றைக்குச் சுமார்தான், திருப்தியில்லை' என்று நான் நினைத்தாலும், ரசிகர்கள் அதை மன்னித்து விடுகிறார்கள். ஒரு குழந்தையின் முயற்சியை மெச்சுவது போல் மனம் விட்டுப் பாராட்டுகிறார்கள். நெகிழ்ந்து போகிறார்கள். 'நீ இன்னும் நிறைய வருஷம் பாடிண்டே இருக்கணும் குழந்தே....' என்கிறார்கள்.

''இதெல்லாம் ஏராளமான தைரியத்தைக் கொடுக்கிற அதே சமயத்தில் பொறுப்பையும் மறக்க விடாமல் செய்கிறது. இசை என்பது மனிதர்களிடையே மிக உயரிய ஒரு பரிமாற்றம் என்பதை எனக்கு உணர்த்துகிறது. அதனால்தான் இதையே முழு நேரப் பணியாகக் கொண்டிருக்கிறேன். அதிர்ஷ்டவசமாக இது எனக்குச் சாத்தியமாகியுள்ளது....''

''அடிக்கடி பொறுப்பு பற்றிப் பேசுகிறீர்களே ஜெயஸ்ரீ, எப்போதாவது பாட்டு, கச்சேரி, பயிற்சி என்ற கட்டுப்பாடு வட்டத்தை விட்டு வெளியே வந்து சராசரி இளம் பெண்ணாக வாழ ஆசை வராதா....?''

''நான் ரொம்ப சராசரிதான் - சென்னைக்கு வந்து குடியேறும் வரை. ஆரம்பத்தில், இங்கே மாமா வீட்டில் தங்கி பாட்டுக் கற்றுக் கொண்டேன். அப்போது என் சகோதரர்களுக்கு ஒரே ஆச்சரியம். 'எப்படி உன்னால் மெட்ராஸில் தங்கியிருக்க முடிகிறது...?' என்று கேட்டார்கள். பம்பாயின் வேக வாழ்க்கைக்கும் இதற்கும் ஏணி வைத்தாலும் எட்டாது! ஆனால் கர்நாடக இசை கற்றுக் கொள்ளச் சரியான இடம் சென்னைதான். பழைய பம்பாய் வாழ்க்கைக்கான ஏக்கம் அவ்வப்போது தலை தூக்கும். வருஷத்துக்கு ஒரு முறை எனக்கு நானே அந்தச் சலுகையைக் கொடுத்துக் கொள்வேன். ஒரு வாரம் பம்பாயில் தங்கி, புயல் வாழ்க்கை வாழ்வேன். மராட்டி நாடகம் பார்ப்பேன், ஹிந்துஸ்

தாவி கச்சேரி, பாப் மியூசிக் நிகழ்ச்சிகளுக்குப் போவேன். நண்பர்களையெல்லாம் சந்தித்து அரட்டை, அப்புறம் ஏதாவது விளம்பரத்துக்கு 'ஜிங்கில்' பாடுவது....''

'போர்ன்விடா' 'பான்ட்ஸ் ட்ரீம் ஃப்ளவர் சோப்' இன்னும் சில விளம்பரப் பாடல்கள் ஜெயஸ்ரீ பாடியவைதான்....

''சினிமா வாய்ப்புக் கிடைத்தால் பாடுவீர்களா....?''

''ஏற்கெனவே பாடியிருக்கிறேன்....'' என்ற பதிலுடன் நம்மை ஆச்சரியப்படுத்துகிறார் ஜெயஸ்ரீ. ''பம்பாயில் நான் பாடுவதை ஒரு முறை கேட்க நேர்ந்த எஸ்.பி.பி., சென்னை வந்து இளையராஜாவைச் சந்திக்கும்படி சொன்னார். வாய்ப்பும் கிடைத்தது. அப்போது சென்னையிலேயே தங்கும்படி இளையராஜா கேட்ட போது நான் கல்லூரிப் படிப்பை முடித்திருக்கவில்லை. அம்மாவுக்கு என் படிப்புத் தடைப்படுவதில் விருப்பமில்லை. அதனால் பம்பாய்க்குத் திரும்பி விட்டோம்....''

''அந்த வாய்ப்பு நழுவிப் போன வருத்தம் இருக்கிறதா....?''

''இல்லை! அதை எடுத்துக் கொண்டிருந்தால் என் வாழ்க்கை வேறு மாதிரி போயிருக்கும்... இப்போதும் சினிமாவில் பாடச் சொல்லிக் கேட்கிறார்கள். 'குடும்ப சமேதம்' 'பைத்ரிகம்' என்று இரண்டு மலையாளப் படங்களில் பாடியிருக்கிறேன். கர்நாடக இசை அடிப்படையிலான மெட்டுகள்தான்.''

ஜெயஸ்ரீயின் கர்நாடக இசை காஸட் ஒன்றைச் சமீபத்தில் 'சங்கீதா' வெளியிட்டிருக்கிறது. கல்யாண கச்சேரிகள், சபா கச்சேரிகள், சிறிய அமைப்புகளில் நிகழ்ச்சிகள் என்று ஜெயஸ்ரீயின் டைரி நிரம்பியிருக்கிறது. YACM (கர்நாடக இசைக்கான இளைஞர் சங்கம்) அமைப்புக்காகப் பள்ளி மாணவர்களுக்கு Lecture - concerts வழங்கியிருக்கிறார். 'கச்சேரியின் இடையே இசை பற்றி விளக்கும், இந்த யுக்தி நல்ல பலன் அளிக்கிறது' என்கிறார்.

சென்னையின் கலாசார இதயமாகக் கருதப்படும் மயிலையில், ஒரு வீட்டின் இரண்டாவது மாடியில், ரசனையுடன் எளிமையாக அலங்கரிக்கப்பட்ட பகுதியில் அம்மாவுடன் வசிக்கிறார். குரு லால்குடியைப் பற்றிய பேச்சுடன் ஆரம்பித்த சந்திப்பு மீண்டும் அதே இடத்தில் வந்து முடிகிறது.

''சில சமயம் அவரை ரொம்ப கஷ்டப்படுத்தறோம் என்று எனக்குத் தோணும். அவர் சொல்வது புரியாது அல்லது பாட வராது.... 'இன்னிக்கு மூளையைக் கழட்டி வைச்சுட்டு வந்துட்டே போலிருக்கு... நீ நிறைய வல்லாரை சாப்பிடணும். மூளைக்கு நல்லது' என்று கடிந்து கொள்வார். மறு நாள் 'நேத்திக்கு ரொம்ப கோவப்பட்டுட்டேனோ...' என்று மெய்யாகவே வருந்துவார்; வராமல் போன பிடிகள் வரும் போது 'அன்னைக்கு வராதுன்னு சொன்னியே, இன்னிக்கு வந்துடுத்து பார்த்தியா...' என்று உற்சாகப்படுத்துவார்... அவ்வளவு ஏன்? குடும்பத்தின் அங்கத்தினர்களாக சிஷ்யர்களையும் கூட்டி இழுத்துக் கொண்டு கச்சேரிக்குப் போய் வருவார். எங்கே போனாலும் எந்த வேளையிலும் இசை பற்றி மட்டுமின்றி வாழ்க்கைக்கு உபயோகமான விஷயங்களையும் பேசுவார்....

''தனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் எங்களுக்குச் சொல்லிக் கொடுத்துவிட வேண்டும் என்ற வேகம் வரும் அவருக்கு.... அந்த வேகத்தில் என்னால் வாங்கிக் கொள்ள முடியாது. திணறிப் போய், மலைத்துப் போய் தயங்கும் போது 'பாட்டுங்கறது லட்டு மாதிரி இல்லையேம்மா. அப்படி இருந்தா அதை ஒரு தட்டுல வைச்சு உனக்குக் கொடுத்துட மாட்டேனா....' என்பார். அப்படியே நெகிழ்ந்து போய்விடுவேன்...'' - உணர்ச்சி மிகுதியில் ஜெயஸ்ரீயின் கண்களில் பளபளப்பு.

– சீதா ரவி

அட்டை வண்ணப்படம் : யோகா

அடுத்த இதழில்...

●● காங்கிரஸின் எழுச்சி : புதிய திட்டம் பலன் தருமா?





●● சுகன்யா - ஒரு சந்திப்பு

# அரசியலுக்குப் பறந்து வந்த பைலட்!

விமான ஓட்டுனராக இருந்துவிட்டு, பின்னர் அரசியலில் நுழைந்து பிரபலமானவர் யார்....?

குவிஸ் நிபுணரல்லாதவர்கள் கூட சுலபமாகப் பதில் சொல்வார்கள் - 'ராஜீவ் காந்தி!' என்று.

இந்தக் கேள்விக்கு இன்னொரு பதிலும் இருக்கிறது : 'ராஜேஷ் பைலட்'! இன்னும் சொல்லப் போனால் இவர் விமானி என்பதால் தான் இவருக்கு அந்தப் பெயரே அமைந்தது! எப்படி.....?

ஒரு சுவையான ஃப்ளாஷ் பாக் :

அந்த இளைஞனின் பெயர் ராஜேஷ் பிரசாத். அப்பாவின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக இந்திய விமானப் படையில் சேர்ந்து அதிகாரியானார். திடீரென்று அரசியலில் புக ஆசை வந்தது. குடும்பத்துக்குப் பரிச்சயமான இந்திரா காந்தி அம்மையாரை அணுகினார். தமது ஆவலை வெளிப்படுத்தினார்.

''நல்ல வேலையை விட்டு விட்டு அரசியலுக்கு வருகிறேன். என்கிறாயே....?'' இந்திரா காந்தி அக்கறையுடன் கேட்டார்.

''சின்ன வயதில் நான் எவ்வளவோ கஷ்டப்பட்டதால் தான் முன்னேறியிருக்கிறேன். இன்றைக்கு ஒரு பைலட்டாக இருக்கிறேன். என்னைப் போல் இன்றைக்குக் கஷ்டப்படும் எத்தனையோ இளைஞர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு உதவுவதுதான் என் நோக்கம்... அரசியலில் நுழைந்தால் அதைச் சாதிக்க முடியும் என்று நினைக்கிறேன்....''

- பளிச்சென்று பதில்



வந்தது ராஜேஷிடமிருந்து.

சற்று யோசித்த இந்திரா காந்தி, மறு நாள் வரும்படி சொல்லி அனுப்பிவைத்தார். மறு நாள் அம்மையாரைச் சந்தித்த ராஜேஷுக்கு விலாவாரியாக அறிவுரை கிடைத்தது :

''அரசியலே சாக்கடைன்னு சொல்லுவாங்க; இது மந்திரம் தந்திரம் நிறைந்த உலகம். கௌரவமான ஏர்ஃபோர்ஸ் பைலட் வேலையை விட்டு விட்டு நீ ஏன் இதற்குள் புக வேண்டும்?''

''எனக்கு அறிவுரை வேண்டாம்; அரசியலில் சேரணும். உதவி பண்ணுங்க...'' - ராஜேஷ் துணிச்சலாகப் பதில் பேசினாலும் இந்திரா காந்தி மசியவில்லை.

''ஒரு நாளைக்கு உன் மனைவியையும் அழைச்சுக்கிட்டு வா....'' என்று சொல்லி யனுப்பி விட்டார்.

தம்பதி சமேதராய் அவர்கள் வந்த போது திருமதி ராஜேஷுக்குத் தம் கணவர் அரசியலில் சேர்வது குறித்து ஏதும் ஆட்சேபணையில்லை என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டார் இந்திரா. ''எனது வக்கீல் தொழில் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டே எங்கள் குடும்பத்தை நடத்துவேன்'' என்று தன்னம்பிக்கையுடன் சொன்னார் திருமதி ராஜேஷ்.

இது நடந்து முடிந்து சில மாதங்கள் வரை ராஜேஷ் பிரசாத் தவியாய்த் தவித்தார். காரணம் : விமானி வேலையை விட்டாகி விட்டது; ஆனால் இந்திரா அம்மையாரிடமிருந்து எந்த அழைப்பும் இல்லை.

திடீரென்று ஒரு நாள் போன் வந்தது. சரண் சிங் அமைச்சரவை கவிழ்ந்து விட, தேர்தல் அறிவிக்கப்பட்டிருந்த சமயம் அது. தேர்தல் குழுவைச் சேர்ந்த அந்துலே, ஸ்டீஃபன் ஆகியோரை ராஜேஷ் பிரசாத் போய்ச் சந்திக்க வேண்டும் என்று இந்திரா காந்தி கூறினார்.

அப்படியே செய்த ராஜேஷ் தாம் பரத்பூர் தொகுதியிலிருந்து பாராளுமன்றத்துக்குப் போட்டியிடத் தேர்வாகியிருப்பதாக அறிந்தார்.

பரத்பூர் எங்கேயிருக்கிறது என்பதையே அறியாத ராஜேஷ் பிரசாத், அந்த காங்கிரஸ் அலுவலக அறையில் இருந்த இந்தியா தேசப் படத்தில் பரத்பூரைத் தேடினார்.

''பாருங்க; பரத்பூர் எங்கேயிருக்குன்னு கூட தெரியல்லை. இவரைப் போய் அந்த இடத்திலேருந்து போட்டியிடச் சொல்றாரே இந்திரா!'' என்று அலுப்புடன் ஸ்டீஃபன் 'கமென்ட்' அடித்ததைச் சகித்துக் கொண்டார்.

பரத்பூர் ராஜஸ்தானில் இருக்கிறது என்பதைக் கண்டறிந்து வேட்பு மனு தாக்கல் செய்ய அங்கு போய்ச் சேர்ந்தார் ராஜேஷ் பிரசாத்.

மனுவை அவர் பூர்த்தி செய்து கொண்டிருந்த சமயம், ஒரு காங்கிரஸ் தொண்டர், ''உங்க பெயரை 'ராஜேஷ் பிரசாத்'னு போடறதைவிட 'ராஜேஷ் பைலட்'னு போட்டா இன்னும் கவர்ச்சியா இருக்குமே'' என்று யோசனை கூற, ராஜேஷும் சிரித்துக் கொண்டே தமது பெயரை 'ராஜேஷ் பைலட்' என்று எழுதினார். அதே பெயரில் பரத்பூர் தொகுதியிலிருந்து வெற்றியும் பெற்றார்!

''கட்டுப்பாடுகள் அதிகம் உள்ள ராணுவத்திலிருந்து கட்டுப்பாடே இல்லாத அரசியலுக்கு வந்திருக்கிறேன்'' என்று கூறிச் சிரிக்கும் ராஜேஷ் பைலட், இன்று உள் துறை இணை அமைச்சர். காஷ்மீர், ஜார் கண்ட், போடோ பிரச்னைகளில் இவருக்கு அதிகாரம் கூடுதலாக இருப்பது குறித்து காங். வட்டாரங்களில் முணு முணுப்பு. அதையும் சமாளித்துப் பிரச்னைகளுக்கும் முடிவு காண முயன்று கொண்டிருக்கிறார் பைலட். 'போடோ அதிகார ஹில் கவுன்சில்' அமைத்து நல்ல பெயர் தட்டிக் கொண்டார். டெல்லி போட்கிளப்பில் நடக்கவிருந்த பி.ஜே.பி. கூட்டத்துக்குத் தடை விதிப்பதற்கு பைலட் தயக்கம் காட்டாமல் காவல் துறையினருக்கு ஆணை பிறப்பித்தார். கல கலவென்று சிரித்துப் பேசி, எல்லோரையும் கவரும் இவரை 'ரோமியோ பாப்பா' என்று செல்லமாக அழைக்கிறது காவல்துறை!

சிறுவனாக இருந்த போது ஒரு பங்களாவில் வசித்த வசதியான குடும்பத்தாருக்குப் பால் எடுத்துச் சென்று கொடுக்கும் பணியைச் செய்தார் பைலட். அவர் இன்று தமது மனைவி மற்றும் இரு குழந்தைகளுடன் வசிப்பது அதே பங்களாவில்!

- 'ப்ரித்விஷ் நந்தி ஷோ' என்ற டி.வி. நிகழ்ச்சியின் அடிப்படையில் தொகுத்தவர் :

எஸ். ஆலன்.



''உங்க காலில் விழுந்து வணங்குறதுக்குன்னு கட்சியில புதுசா ஒரு கோஷ்டி முளைச்சதுக்குச் சந்தோஷப்படாம, ஏன் கவலைப்படுறீங்க?''

''தலைமைப் பதவியை ராஜினாமா பண்ணச் சொல்லி கால்ல விழப் போறாங்களாம்!''

- பி.ஜி.பி. இசக்கி

# திரு.வி.க. நகர் பெனி:பிட் :பண்டு லிமிடெட்

ஸ்தாபிதம் : 1989

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை - 600 082. போன்: 610390

பாரீஸ் கிளை : 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (கந்தசாமி கோயில் அருகில்), பார்க் டவுன், சென்னை - 600 003. போன்: 565760

## பென்ஷனர் டெபாசிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 வருடம்<br>2 வருடங்கள்<br>3 வருடங்கள் | 21% |

★ இத்திட்டத்தின் கீழ் ஓய்வு பெற்றோர், 50 வயது அடைந்தோர், விதவைகள், உடல் ஊனமுற்றோர் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் பயன் பெறலாம்.

★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்.

★ வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்

## வைப்பு நிதி

| காலம் (மாதங்கள்) | வட்டி விகிதம் | |
|---|---|---|
| | ரூ.10,000க்கு கீழ் | ரூ.10,000மும் அதற்கு மேலும் |
| 12 | 17% | 18% |
| 24 | 18% | 19% |
| 36 | 19% | 20% |

★ குறைந்த பட்ச டெபாசிட் ரூ.1,000

★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்.

★ குறைந்த பட்சம் ரூ.10,000 டெபாசிட் செய்தால் வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

## மறுமுதலீட்டுத் திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 12 மாதங்கள் | 1,185 |
| | 24 மாதங்கள் | 1,430 |
| | 36 மாதங்கள் | 1,760 |
| | 44 மாதங்கள் | 2,000 |

## ஐஸ்வர்யா டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 10 வருடங்கள் | 6,919 |
| | 15 வருடங்கள் | 18,885 |
| | 20 வருடங்கள் | 52,827 |
| | 23 வருடங்கள் | 95,760 |

★ மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் பிரதி மாதம் ரூ.25 செலுத்தி 12 மாதங்கள் கழித்து ரூ.330 பெறுங்கள்.

★ சேமிப்புக் கணக்கில் உள்ள நிலுவை தொகைக்கு நாள் தோறும் 12% P.A. வட்டி வழங்கப்படும்.

★ நகையின் பேரில் ஒரு சவரனுக்கு ரூ.2,600 வரை கடன் வழங்கப்படும்.

★ சென்னை நகர வீடுகளின் பேரிலும் கடன் வழங்கப்படும்.

★ பங்குதாரர்களுக்கு மட்டும் ★ ரூ.6 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

★ இது சீட்டு நிறுவனம் அல்ல.

வார விடுமுறை : தலைமை அலுவலகம் : செவ்வாய், பாரீஸ் கிளை: ஞாயிறு.

Ideal/93

A.M.O. ஹரிஹரேஸ்வர ராவ், B.Com., B.L.,
நிர்வாக இயக்குனர்.

✿ பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள் ✿

# அமில மழை முதல்
# ஆட்சிக் கவிழ்ப்

மழை பெய்தால் நாட்டுக்கு நல்லது என்கிறோம்; பெய்கிற மழையே அமில மழையாகப் பெய்தால் என்ன செய்வது? தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் புகை மண்டலம் அதில் கலந்திருக்கும் விஷ வாயுக்கள் எல்லாம் கார் மேகங்களிடையில் படிந்து விடுவதால் மழை பெய்யும் போது அமிலத்தன்மை பெறுகிறது.

இந்தியாவில் பத்து நகரங்களில் அமில மழை பெய்கிறது என்றும் அதில் கொச்சியும் ஒன்று எனவும் கேரளத்தில் நடந்த ஒரு ஆராய்ச்சியில் தெரியவருகிறது. ஆறுதலான விஷயம் பத்து நகரங்களிலும் குறைவான நச்சுத்தன்மை உடையது கொச்சியில் பெய்யும் மழை என்பதுதான்! கான்பூர், ஹைதராபாதில்தான் மிக அதிகம். ''சென்னையிலும் அமில மழை பெய்வதுண்டு!'' என்றால், ''ஏதோ மழைன்னு பெய்தால் சரிதான்'' என்கிறார் தண்ணீர் தட்டுப்பாட்டில் தவித்துப் போயிருக்கும் சென்னைவாசி.

## வனங்களுக்கு ஆபத்து!

சுற்றுச் சூழல் பாதுகாக்கப்பட வேண்டும், மழை பெய்ய வேண்டும் என்றால் வனங்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது இன்று பள்ளிச் சிறுவனுக்குக் கூட தெரிந்த விஷயம். ஆனால் ராஜஸ்தான் அரசு, ''வன நிலப் பாதுகாப்புச் சட்டம்'' இயற்றிய கையோடு அந்த நிலங்களைத் தோண்டி சுரங்கம் அமைக்கவும் அனுமதி வழங்கியுள்ளது! இவ்வாறு நடந்து வரும் 215 சுரங்கங்களில் உடனே வேலை நிறுத்தப்பட வேண்டும் என்று உச்ச நீதி மன்றம் சமீபத்தில் ஒரு தீர்ப்பு வழங்கி ராஜஸ்தான் அரசின் போக்கு குறித்து வியப்பும் தெரிவித்துள்ளது. ராஜஸ்தான் அரசோ சுரங்கங்களை மூடிவிட்டால் ஏராளமான பேருக்கு ஏற்படக் கூடிய வேலை இழப்பு பற்றிக் கவலைப்படுவதோடு மாநிலத்தின் பொருளாதாரமே பாதிக்கப்படும் என்றும் கருதுகிறது. எனவே உச்ச நீதி மன்றம் தன் தீர்ப்பை மறு பரிசீலனை செய்ய வேண்டும் என்கிறது!

## கூடாரக் காரியாலயம்!

'வேலை இழப்பு இருக்கட்டும் வேலை கிடைத்தால் மட்டும் என்ன வாழ்கிறதாம்?' என்று முணுமுணுப்பவர்கள் தில்லி போலீஸ். தலைநகரில் காவல் துறையின் இருப்பிடங்களும் அலுவலகங்களும் கூட 44 இடங்களில் கூடாரங்களிலும் தாற்காலிகக் குடில்களிலும்தான் நடக்கின்றன. 'கழிப்பறை வசதிகள் கூடக் கிடையாது; மிருகங்களை விடக் கேவலமான



வாழ்க்கை' என்கிறார் ஒரு சப் இன்ஸ்பெக்டர்.

### 90 முறை 356!

# வரை!

சட்ட ஒழுங்கைக் காப்பாற்ற வேண்டிய போலீஸாரின் நிலை இப்படியென்றால் மத்திய அரசோ 'சட்ட ஒழுங்கு குலைந்தது' அல்லது 'அரசியல் சாசனப்படி ஆட்சி நடத்த முடியாத நிலை ஏற்பட்டது' என்று கூறிக் கொண்டு இன்று வரை (42 ஆண்டுகளில்) 90 முறை அரசியல் சாசனத்தின் 356 வது பிரிவைப் பிரயோகித்து மாநில அரசுகளைக் கலைத்திருக்கிறது! இந்த 356 பிரயோகத்தில் சட்ட ஒழுங்கு நோக்கை விட அரசியல் நோக்கே அதிகம் என்பதால் இது பற்றி ஒரு முடிவெடுக்க வேண்டும் என்று அரசியல் சட்ட நிபுணர்கள் கருதுகிறார்கள். சர்க்காரியா அறிக்கை வேறு இருக்கிறது - கவனிக்கப்படாமல்! இக் காரணங்களால் 'ம.பி. மாநில அரசைக் கலைத்தது செல்லாது' என்ற சமீபத்திய உயர் நீதி மன்றத் தீர்ப்பு, பெரும் பரபரப்பை மட்டுமின்றி, சட்ட நிபுணர்களிடையே ஆழ்ந்த சிந்தனையையும் தோற்றுவித்துள்ளது. மத்திய அரசின் மேல் முறையீட்டை விசாரித்து வரும் உச்ச நீதி மன்றம் என்ன சொல்கிறதோ பார்ப்போம்.




### பங்காரப்பா காங்கிரஸ்!

மாநிலங்களை மத்திய அரசு கவிழ்ப்பது ஒரு புறமிருக்க, மாநில அரசுகளை கோஷ்டிப் பூசல்களும் கவிழ்த்துத் தான் வருகின்றன அவ்வப்போது. மொய்லி பதவிக்கு வந்து நாலு மாதங்களுக்குள்ளாகவே அவரைக் கவிழ்க்க கோஷ்டி சேர்க்க ஆரம்பித்து விட்டார் பங்காரப்பா. மந்திரி பதவி கிடைக்காத அதிருப்தியாளர்களைத் திரட்டினார். பங்காரப்பா காங்கிரஸ்









(காங்கிரஸ் - பி) என்று கட்சிக்குப் பெயர் சூட்டப்பட்டு விட்டதாகக் கூடச் செய்தி!

பார்த்தார் மொய்லி. எதிர் நடவடிக்கையாக ஆப்பிள் கம்ப்யூட்டர் வாங்குவது தொடர்பான ஊழல் வழக்கை ஸி.பி.ஐ. இடம் ஒப்படைத்தார். அவ்வளவுதான். ஸி.பி.ஐ. அதிரடியாகச் செயல்பட ஆரம்பித்து, ரெய்டுகளை நடத்தியது. பாட்மின்டன் ஆடிக் கொண்டிருந்த பங்காரப்பாவை போலீஸ் ஜீப்பில் ஏற்றி வீட்டுக்குக் கொணர்ந்து விசாரித்தது. ''எல்லாம் அரசியல் பழிவாங்கல்தான்'' என்று சொல்லி முன் ஜாமீன் வாங்கிக் கொண்ட பங்காரப்பா, ''மொய்லி இன்று என்னைப் பழிவாங்கினால் நாளை அவரைப் பழி வாங்க வேறொருவர் வரமாட்டாரா?'' என்றும் கேட்கிறார். ஆனால் குரல்தான் தழுதழுத்துப் போயிற்று!

## மதியான பீர்

எதிர்காலம் எப்படியோ இன்று ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறது மொய்லி அரசு. பெங்களூரில் பப்கள் (Pubs) பெருகிவிட்டன. மதிய வேளையில் கூட பப்புக்கு வந்து இரண்டு மக் பீர் அருந்திவிட்டு அலுவலகம் திரும்புவோர் பெருகி விட்டனர். கல்லூரி மாணவர்களும் இப்படிச் செய்கிறார்கள் என்று தெரியவந்தது. 'இனி, மதிய வேளைகளில் பப்களைத் திறந்து வைக்கக் கூடாது' என்று உத்தரவிட்டுள்ளது மொய்லி அரசு. ஏதோ அந்த மட்டில் நல்லது.

## மூட நம்பிக்கைக்குப் பலி!

கர்நாடகாவில் இன்று மது அரக்கனை விடக் கொடியதாகப் பயமுறுத்துவது காலரா. மைசூரில் பரவி பெங்களூரையும் அச்சுறுத்தி வருகிறது. இடைவழியில் உள்ள சிற்றூர்களில் மக்கள் காலராவுக்குப் பலியாவதற்கு முன்பாக மூட நம்பிக்கைகளுக்குப் பலியாகி விட்டார்கள். ஹிரியூரில் காலரா வரக் கூடாது என்பதற்காகத் தடுப்பு ஊசி போட்டுக் கொள்வதற்குப் பதில் தெய்வத்துக்குப் பலி கொடுத்திருக்கிறார்கள்! அதுவும் எப்படி? இருபது எருமைகள், எண்பது ஆடுகள், நூற்றுக்கணக்கான கோழிகள் என்று... போதாக் குறைக்குப் பத்தாயிரம் தேங்காய்கள், மூட்டை மூட்டையாய் அரிசி.... கழுகுகள் வட்ட மிட, நிணமும் சதையுமாக ஊரே ஈ மொய்த்து நாறிக் கொண்டிருக்கிறது. இது காரணமாகவே காலரா மேலும் பரவுதல் சாத்தியமே!

தில்லியிலிருந்து : ராஜீவி நரசிம்மன்

பெங்களூரிலிருந்து : பெர்னாண்டஸ்

திருவனந்தபுரத்திலிருந்து:
எஸ்.எஸ்.மணி

# மல்லிகைப் பூ

## காலம் இது

மல்லிகைப் பூ புனிதத் தனமை தந்து சமநிலையும் அளிக்கும் நறுமணத்தை முகர்வது அவசியம். இதனால் பூமியில் மறைந்து உள்ள அதன் சாரம் இரகசிய உண்மை நாம் கிரகித்துக் கொள்ள முடிகிறது.

—சிவமஹா புராணம்

மல்லிகைப் பூவினால் அர்ச்சனை செய்தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

மலர்களை மாலைகளாக தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்வது மலர்களால் அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற மடங்கு பலன் தரும். ஒருவன் தன் சொந்த தோட்டத்திலிருந்து மலர்களை வந்து பகவானுக்கு அர்ப்பணித்தால் அடையும் பலன்களைவிட காட்டிலிருந்து சேகரித்த பூக்களால் அர்ச்சிப்பது மும்மடங்கு பலனைக் காட்டும்.

அக்னிப் புராணம்

அத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.



திருமண வைபவங்களுக்கு : சீர் முறுக்கு, சீர்முள்ளுத் தேன்குழல், தேன்குழல், சீர் அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத்தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2.வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு
சென்னை-20
போன் : 412557.

# மாவட்டத்துக்குப் பெயர் தரும் மாமனிதர்!



மிகவும் வசதியான வேளாண் குடும்பத்தைச் சேர்ந்த எஸ். எஸ். ராமசாமி படையாச்சியார், குடும்பச் சொத்தையெல்லாம் கட்சி அரசியலுக்குச் செலவிட்டார். காசு சேர்க்க ஆசையில்லாமலே கடைசி வரை வாழ்ந்த அரசியல்வாதி அவர். ராஜாஜி, காமராஜின் தொண்டர். சுதந்திரா கட்சியிலும் சிறிது காலம் இருந்தார்.

சுதந்திர பாரதத்தின் முதலாவது பொதுத் தேர்தலில் (1952) - உழைப்பாளர் கட்சியின் வேட்பாளராகக் கடலூர்த் தொகுதியில் நின்று வெற்றி பெற்றவர் படையாச்சியார். அப்போது தி.மு.க. அவரை ஆதரித்தது.

இரண்டு ஆண்டுகளில் காமராஜ் அமைச்சரவை ஏற்பட்ட போது காங்கிரஸில் இணைந்து கொண்டு 'ஸ்தல ஸ்தாபன மந்திரி' ஆனார். அதில் இணைவதற்கு ஒரு நிபந்தனையாக மிகவும் பிற்படுத்தப்பட்டவர்களின் பட்டியல் ஒன்று உருவாக வழி கண்டவர் படையாச்சியார். அப்போது அந்தப் பட்டியலில் 39 வகுப்புக்கள்!

ஒடுக்கப்பட்ட மிகவும் பிற்படுத்தப்பட்ட மக்களுக்குத் தன்னம்பிக்கையையும், துணிவையும் விழிப்புணர்வையும் ஊட்டிய எளிமையான தலைவர் அவர். யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் அவரை அணுகி உதவி கேட்கலாம். 'பந்தா'வே இல்லாத அரசியல்வாதி. கேட்கும் கோரிக்கை நியாயமற்றதாக இருந்தால் பட்டென்று பேசி அனுப்பிவிடுவார். நியாயமானதாக இருந்தால் சின்னப் பொடியன் கூட 'அமைச்சரைச்' சந்தித்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடியும்.

சிரிக்கச் சிரிக்க நிறையப் பேசுவார். தேர்ந்த இலக்கியத்தரமான மேடைப் பேச்சாளர் அல்லர் எனினும், சொல்ல வேண்டியதைக் கோர்வையாக நறுக்குத் தெறித்த மாதிரி சொல்லத் தெரியும்.

காமராஜ் அமைச்சரவையில் வி.எஸ். உடன் பணியாற்றிய நாட்களில் ஏதாவது உதவி கோரி வி.எஸ்ஸிடம் போக வேண்டும் என்றால் ''கூடவே ஒரு வக்கீலையும் கூட்டிக்கிட்டுப் போங்க. அப்பத்தான் அவரு சொல்ற சட்டப் பாயிண்டுக்கெல்லாம் பதில் சொல்லிச் சமாளிக்க முடியும்'' என்று கிண்டலடிப்பார். வி.எஸ்.விடம் சிபாரிசுக்குப் போய் ஒரு காரியம் சாதித்துக் கொள்ள முயல்வது என்பது அவ்வளவு சிரமமானது.

மனத்தில் தோன்றுவதைப் பட்டென்று போட்டு உடைத்து விடுவார். ஒரு சமயம் காடாம்புலியூரில் ஒரு தேர்தல் கூட்டம். அதிமுகவிலிருந்த பண்ருட்டி ராமச்சந்திரனை எதிர்த்து ஒரு திமுக வேட்பாளர். அவருக்கு ஆதரவாக, தோழமைக் கட்சி என்ற முறையில் காங்கிரஸ்காரரான படையாச்சியாரை அழைத்துப் பேசச் சொன்னார்கள். ''இந்தப் பக்கத்திலேயே நல்ல பிள்ளை. நிறையப் படிச்சவர். விஷயம் தெரிந்த பிள்ளை ராமச்சந்திரன். அவரை எதிர்த்துப் போட்டி போட்டு என்ன பிரயோசனம்..?'' என்கிற மாதிரி மேடையிலேயே பேசி, அழைத்தவர்களை நெளிய வைத்து விட்டார். அப்புறம் படையாச்சியாரை அழைப்பதையே விட்டு விட்டார்கள்!

இரு சமுதாயத்தினரிடையே அவ்வப்போது வகுப்புக் கலவரங்கள் முளைவிடும் பகுதி அவருடையது. இரு சாராரையும் அழைத்துப் பேசி அமைதி ஏற்படுத்த உடனே செயல்படுவார். ''படையாச்சியாரிடம் சொன்னால் எல்லாம் சரி பண்ணிடுவார்'' என்று மற்ற தலைவர்கள் நம்பிக்கையோடு சொல்வார்கள்.

கொஞ்ச காலம் காங்கிரஸை விட்டு விலகிச் சுதந்திரக் கட்சியிலும் இருந்தார். பெரும்பாலும் காங்கிரஸ்காரராகவே வாழ்ந்தவர்.

கட்சிபேதமற்ற தொண்டுள்ளம் அவரிடம் நிறையவே இருந்தது. இந்த மனப்பாங்கு அரசியலில் இன்றைக்கு மிகவும் நினைத்துப் போற்றத்தக்க ஒன்று.

*(பண்ருட்டி எஸ். ராமச்சந்திரன் அவர்களிடம் உரையாடித் தொகுத்தவை)*

- பாலன் பூங்குழலி

**விழுப்புரத்தைத் தலைமையகமாகக் கொண்ட தென்னாற்காடு மாவட்டத்தின் ஒரு பகுதிக்கு ராமசாமி படையாச்சியின் பெயர் சூட்டப்பட்டுள்ளது.**



இலவசம்!
KISSAN TOMATO KETCHUP
வாங்கும் ஒவ்வொரு ஶ்ரீபெட் பாட்டிலுடனும் 1 டொமேட்டோ கெட்ச்சப் ஸாசே இலவசம். ஒவ்வொரு ஜாருடனும் 2 டொமேட்டோ கெட்ச்சப் ஸாசே.
உங்கள் கவனத்திற்கு
★ உங்கள் ஶ்ரீபெட் பில்களை பத்திரமாக வைத்திருங்கள். ஒரு உன்னதமான வாய்ப்பு காத்திருக்கிறது. விரைவில் மேலும் விவரங்கள்.
இச்சலுகை 31 ஆகஸ்டு 1993 வரை மட்டுமே.
SHRIRAM GROUP COMPANIES MADRAS
ஶ்ரீராம் நிறுவனத்தின் தரமான தயாரிப்பு!
ஶ்ரீபெட்
ஜார்கள் ◆ பாட்டில்கள்
உடையாதவை
உணவுத்தரம் காப்பவை ◆ சுகாதாரமானவை
விநியோகஸ்தர்கள்:
ஶ்ரீராம் சேல்ஸ் இன்டர்நேஷனல்
✱ இந்த வாய்ப்பு சென்னை, வேலூர், திருச்சி, கரூர், தஞ்சை, சேலம், ஈரோடு, கோவை, திருப்பூர், மதுரை, நெல்லை, மயிலாடுதுறை, கடலூர், தூத்துக்குடி, நாகர்கோவில், பாண்டிச்சேரி ஆகிய நகரங்களில் மட்டுமே.
இச்சலுகை இல்லாமலும் ஶ்ரீபெட் கிடைக்கும்.
AKSHAR SSI/9304 1

# தந்தி பொன்விழா: ஆதித்தனாரின் புகழ் விழா!

**தி**னத்தந்தி பொன் விழாவையொட்டி அன்று காலை அதன் வாசகர்களுக்கெல்லாம் 64 பக்கங்கள் கொண்ட ஒரு புத்தகம் இலவசமாக வழங்கப்பட்டது. கடந்த ஐம்பது ஆண்டுகளில் நடந்த முக்கியமான வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தரும் அந்த கையேடு என்றென்றும் பயன்படத்தக்க, பாதுகாக்கப்பட வேண்டிய ஒரு reference நூலாகவே விளங்குகிறது. பொன் விழா சிறப்புத் தபால் உறை வெளியீடு, சொற்பொழிவுகள், பட்டிமன்றம், கலை நிகழ்ச்சிகள் எல்லாமே சுவாரஸ்யமாக அமைந்தன என்றாலும் இவை எல்லாவற்றுக்கும் சிகரமான பணி அந்தக் கையேடு.

அதன் மேலட்டையில் காணப்படும் வாசகம் ''வரலாறு படைத்த தினத்தந்தி'' என்பது. உள்ளே முதல் பக்கத்தில் சிவந்தி ஆதித்தன் எழுதியுள்ள கட்டுரையின் தலைப்போ ''வரலாற்றுப் பெட்டகம்'' என்பது. ஒரு நல்ல நாளிதழுக்கு அடையாளம், அது ஒவ்வொரு தினமும் அன்று படைக்கப்படுகிற வரலாற்று நிகழ்ச்சிகளைப் பிரதிபலித்து, வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ வேண்டும். அப்படி வரலாற்றுப் பெட்டகமாகத் திகழும்போதே வரலாறு படைக்கவும் வேண்டும்! தினத்தந்தி இந்த இரு பணிகளையும் கடந்த 50 ஆண்டுகளில் செவ்வனே செய்து வந்துள்ளது.

**ஆ**ங்கில மோகம் தலைக்கேறி தமிழில் படிப்பதே அகௌரவம் என்று பலரும் கருதி வந்த நாட்களில், தப்பித் தவறி வெளி வந்த சில தமிழ் தினசரிகளும் ஆங்கில அல்லது சமஸ்கிருதப் பதங்களையே அதிகம் பயன்படுத்தின. வேறு சில, கடுமையான பண்டித நடையைக் கையாண்டன. இந்தச் சமயத்தில்தான் ''கல்கி'' தோன்றி, எளிய தமிழில் எழுதி ஏராள வாசகர்களைக் கவர்ந்து தமிழ் வசனத்தில் ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தினார். அடுத்து வந்த ஆதித்தனாரோ இன்னும் கீழிறங்கிச் சென்று, சாமானியரையும் நாளிதழ்கள் கவர வேண்டும் என்றால் அவர்கள் பயன்படுத்தும் மொழியிலேயே அவர்களுக்குச் செய்திகளைச் சொல்ல வேண்டும் என்று தீர்மானித்துச் செயலில் இறங்கினார். எல்லோருக்கும் வாக்குரிமை என்று வந்து விட்ட பிறகு, சாமானியருக்கும் நாட்டு நடப்பும் சமுதாய மாற்றங்களும் தெரிந்திருக்க வேண்டும் எனில் இதுதான் வழி என்பதை அவர் சரியாகக் கணிக்க, தினத்தந்தி அமோக வெற்றி பெற்றது. ஆரம்பத்தில் அதன் நடையைக் கிண்டல் செய்தவர்கள் கூட நாளாவட்டத்தில் அதன் வெற்றி கண்டு மலைத்துக் கருத்தையும் மாற்றிக் கொண்டார்கள். தந்தியும் சாமானியரைப் படிப்படியாக வளரச் செய்து, அவர்கள் வளர்ச்சியோடு தன் நடையையும் ஓரளவு மாற்றிக் கொண்டது.

**தோ**ன்றும் போதே புகழுடன் தோன்றிய தந்தி, பின்னாட்களில் வியத்தகு வளர்ச்சி பெற்றது என்றால் அதற்கு ஆதித்தனாரின் மகன் சிவந்தி ஆதித்தனும் முக்கிய காரணமாவார். பத்து நகரங்

❋ பொன் விழா மேடையில் சிவந்தி ஆதித்தன், நீதிபதி மோகன்



களில் தினத்தந்தியின் பதிப்புகள் வெளியாகின்றன; மூன்றரை லட்சம் பிரதிகள் விற்பனை; அதைப் போல் பல மடங்கு எண்ணிக்கையில் வாசகர்கள்! 35 வருஷங்களுக்கு மேலாக இந்த முதலிடத்தைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறது தந்தி. இதன் காரணமாக வேலை வாய்ப்பும் விதியோக உரிமையும் பெற்று நலமுறும் குடும்பங்கள் எத்தனை எத்தனை! ஆதித்தனார் ஆரம்பத்தில் பத்திரிகைத் தாள் கிடைக்காமல் கையால் தயாரிக்கப்பட்ட தாளைப் பயன்படுத்தி பத்திரிகை அச்சிட்டிருக்கிறார் என்றால் இன்று தினத்தந்தி பங்கேற்புடன் காகித ஆலையே கூட இயங்குகிறது!

இவை தவிர சிவந்தி ஆதித்தனின் சமுதாயப் பார்வைக்குத் தென்காசி கோயில் கோபுரம் ஒரு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. விளையாட்டுத் துறையில் அவர் காட்டி வரும் ஆர்வம் இளைஞர்கள் எல்லோரும் அறிந்ததே.

வரலாறு படைத்த தினத்தந்தியின் பொன் விழா மேடையில், தலைமை தாங்கிய நீதிபதி மோகன், பொன் விழா மலரை வெளியிட்ட ம.பொ.சி., முதல் பிரதி பெற்றுக் கொண்ட கி.ஆ.பெ. விசுவநாதம் உள்பட, திரை உலகக் கலைஞர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் என்று சுமார் 25 பேர் தந்தி பத்திரிகையின் சிறப்புக்களையும் அதன் நிறுவனரின் மாண்புகளையும் வாழையடி வாழையாக அக் குடும்பம் வளர்ந்து வளம் பெறுவதையும் எடுத்துக் கூறி வாழ்த்தினார்கள்.

தந்தி இருக்கும் வரை ஆதித்தனாரின் புகழ் விளங்கும்; ஆதித்தனாரின் பெயர் உள்ள வரை தந்தியும் நிலைத்திருக்கும். தந்தி வெளிவந்து கொண்டிருக்கும் வரை அதில் சிந்துபாதும் தன் சாகசங்களைத் தொடர்வான்!

– கி. ரா.

## போட்டி முடிவு: "குற்றம் சாட்டுகிறோம்!"

குற்றம் குறை கண்டுபிடிப்பதில் நமக்குள்ள அபாரத் திறமை "குற்றம் சாட்டுகிறோம்" போட்டி மூலம் நிருபணம் ஆகியுள்ளது! (நிருபணம் தேவையெனில்!)

திரு செல்லம் நகைச்சுவை ரசனைக்காக வரைந்த காட்சியில் தாம் வேண்டுமென்றே செய்த தவறுகள் பதினெட்டு என்பதாக நம்மிடம் பட்டியல் தந்திருக்கிறார். ஆனால் வாசகர்களோ பதினெட்டுக்கும் மேல் ஏராளமான குறைகளை (30-40 என்று) கண்டுபிடித்து எழுதியிருக்கிறார்கள்! நகைச்சுவை நோக்கில் அவர் வரைந்திருந்தவற்றையும் சிலர் குற்றப் பட்டியலில் சேர்த்து விட்டார்கள்! கூடுதலாக எழுதியிருந்தாலும் பாதகமில்லை, செல்லம் எழுதி அளித்த பட்டியலில் உள்ள பதினெட்டு குற்றங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளனவா என்று கவனமாகப் பரிசீலித்ததில் மூவர் தேர்வு பெற்றனர். பரிசைப் பகிர்ந்து கொள்கின்றனர் :

1. ஆர். நஸீம்,
ஈ 4, அண்ணா காலனி,
திருப்பூர் – 3.

2. திருமதி செல்வி சங்கர்,
35-B முதல் குறுக்குத் தெரு,
கட்டபொம்மன் சாலை,
தீரன் நகர், திருச்சி
– 620 009

3. T. பாலகுஜாம்பாள்,
60, புதுத்தெரு,
ஆற்காடு, வட ஆற்காடு
அம்பேத்கார் மாவ,
– 632 503.



### ஓவியர் செல்லம் தந்த குற்றப்பட்டியல் :

1. கூடான ஐஸ்கிரீம்
2. தலைகீழாக உள்ள நாளிதழ்
3. கிளி மூக்குடன் காகம்
4. மகுடியை நோக்காமல் மறுபுறம் திரும்பிய பாம்பு
5. குடைக்குக் கைப்பிடி - கம்பி இல்லை.
6. கரும்புக்குக் கணு இல்லை.
7. போலீஸ்காரரின் உடை
8. பானை நீரில் குளிப்பவரின் பேண்ட் இரு நிறங்களில்
9. சார்பத் என்ற எழுத்து
10. கத்திரிக்காயை 'மாம்பழம்' என்று கூவி விற்பது
11. தர்பூசணி விற்பவனிடம் கத்தரிக்கோல்
12. தர்பூசணி சாப்பிடுபவனின் பேண்ட்
13. எருமைச் சவாரி செய்யும் சிறுவனின் ஷூ
14. எருமையின் வால்
15. தர்பூசணி மேஜைக்குக் கால் இல்லை
16. நாயின் உருவ அமைப்பு
17. நாளிதழ் படிப்பவருக்கு இருக்கை இல்லை
18. ஐஸ் வண்டிக்குச் சக்கரம் இல்லை.



# T. S. S. NIDHI LTD

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Office: 230, R. K. Mutt Road, Mylapore, Madras 600 004. Phone: 77503.

THIRUVANMIYUR BRANCH : 112, Thiruvalluvar Salai, Kamraj Nagar, Madras 600 041.

## DEPOSIT SCHEMES

### FIXED DEPOSIT SCHEME

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| Period (months) | Rate of interest P.A. | CASH INCENTIVE |
|---|---|---|
| 6 | 15 % | not applicable |
| 12 | 17 % | 1/2 % |
| 24 | 18 % | 1 % |
| 36 | 19 % | 1 1/2 % |
| 60 | 20 % | 2 % |

### KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME
(Re-Investment Plan)

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| DEPOSIT AMOUNT RS. | PERIOD (Months) | MATURITY VALUE RS. | CASH INCENTIVE |
|---|---|---|---|
| 1000 | 12 | 1180 | 1/2 % |
| 1000 | 24 | 1425 | 1 % |
| 1000 | 36 | 1760 | 1 % |
| 1000 | 45 | 2025 | 1 1/2 % |
| 1000 | 67 | 3025 | 2 % |

### HIGHLIGHTS:

* Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
* Company is in 20th year of Service.
* Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
* No tax deduction at source if the fixed deposit holders submits 15 H in case. For any financial year interest exceeds Rs. 2500/-.
* Loan facility upto 75 % on Fixed Deposit and 85 % on Recurring Deposit paid-up amount.
* Pre-mature repayment facility as per terms and conditions
* Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.
* Transaction with members only.
  (Rupees Two only for Membership.)

### JEWEL LOAN

Jewel loans granted on Gold ornaments at Rs. 255/- per gram i.e. Rs. 2040/- per sovereign (8 gm).

Recurring Deposit not required.

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19 % p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)

**Minimum Deposit Rs. 10000/-** **Period - 12 months.**

### RECURRING DEPOSIT SCHEME

(Minimum of Rs. 10/- and in Multiples of Rs. 10/-)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| MONTHLY DEPOSIT | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
| PERIOD (Months) | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

### SAVINGS DEPOSIT SCHEME 9%

| | BUSINESS HOURS | | WEEKLY HOLIDAY |
|---|---|---|---|
| | WEEK DAYS | SUNDAYS | |
| HEAD OFFICE Mylapore | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | FRIDAY |
| BRANCH OFFICE Thiruvanmiyur | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | TUESDAY |

**K. R. V. RAMANI** President | **G. KUMARAVELU** Vice-President | **P. S. SAMBASIVAM** Secretary

# பாண்டியன் மகள்

## 16. சன்னிதியில் உருவிய வாள்

அர்த்த ஜாமம் தாண்டி விட்டதால் அழகரின் அந்த ஆலயம் அமைதியில் ஆழ்ந்து கிடந்தது. ஆனாலும் ஆலயத்தைச் சூழ்ந்திருந்த ஆரண்யத்தில் காற்று சுழன்றடித்த ஓசையும் இடையிடையே கேட்ட மிருகங்களின் கர்ஜனைகளும் உறுமல்களும் இரவின் அமைதியைக் குலைத்தன. வாயிலின் அருகே எரிந்த பந்தங்களிரண்டு மட்டும் அங்கு சற்று வெளிச்சத்தைப் பரப்பின.

ஆலயத்தின் வெளிப்புற மண்டபத்தில் தூண்களுக்கிடையே இருளில் படுத்துக் கிடந்த ஜெயந்தனின் புத்தியைப் போலவே கண்களும் முழு விழிப்புடன் இருந்தன. பட்டர் அளித்த பிரசாதம் பசிக்குத் தேவாமிர்தமாக இருந்தது. அதை உண்டபின் அவன் சோர்வும் களைப்பும் எங்கோ பறந்து விட, புது உற்சாகத்தையும் தெம்பையும் பெற்றிருந்தான். பிரசாதத்தைத் தன்னிடம் தந்து விட்டு, வீட்டிலே ஒரு விருந்தினர் வந்திருப்பதாகக் கூறி அவசரமாக விடை பெற்ற பட்டரை அவன் நன்றியோடு நினைவுகூர்ந்தான். பிரசாதத்தைத் தனக்கு வழங்கி விட்டதால் அந்த ஏழைப் பட்டரும் அவர் விருந்தினரும் ஒருவேளை உணவின்றி இருக்க நேரிட்டிருக்குமோ என்ற கவலை வேறு அவனை இப்போது ஆட்கொண்டது. ஆனால் தனக்கிருந்த களைப்பில் உணவருந்திய போது இந்த எண்ணம் தோன்றவில்லையென்று சிந்திக்கவும் அவனுக்குச் சிரிப்பு தோன்றியது. உண்ட பின் அந்தக் குளிர் மிகுந்த மலைக் காற்றில் அவன் நன்றாக உறங்கியிருக்க வேண்டும். ஆனால் பணியொன்றை மேற்கொண்ட பிறகு உறங்குவது என்பது அவன் வழக்கமில்லையாததால் அவனது விழிகளைத் தழுவ நித்திராதேவி எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் வீணாயின.

காட்டிலிருந்து எழுந்த ஒலிகளினூடே புரவியொன்றின் குளம்பொலியும் கேட்கத் தொடங்கியதால் ஜெயந்தன் சட்டென்று எழுந்து அமர்ந்தான். நிதானமாகக் கேட்ட அந்தக் குளம்பொலி ஆலயத்தைச் சுற்றிச் சென்ற பாதையில் புரவி மெல்ல முன்னேறி வருவதை உணர்த்தியது. தூணொன்றின் மறைவில் நின்ற ஜெயந்தனது விழிகள் இருளை ஊடுருவின.

குதிரை மீது ஆஜானுபாகுவாக அமர்ந்து வந்து கொண்டிருந்தவனைக் கோயில் பந்தத்தின் மங்கிய ஒளியில் கண்ட ஜெயந்தன், ''மார்க்கியன்'' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

மார்க்கியன் எந்தப் பக்கமும் திரும்பாமல் குதிரையை நிதானமாக மதுரை நகரை நோக்கிச் செலுத்தி இருளில் மறைந்தான்.

அவன் மறைந்ததும் ஆலயத்தை விட்டு வெளியே வந்த ஜெயந்தன், அருகில் ஒரு மரத்தின் பின்னால் இருளில் நின்ற தன் புரவியை நெருங்கினான். சற்று நேரம் சிந்தனை வயப்பட்டுத் தாமதித்தவன், புரவியின் மீது ஆரோகணிக்காமல் அதன் முதுகில் ஒருமுறை லேசாகத் தட்டி விட்டு மார்க்கியன் வந்த பாதையை அடுத்துத் தெரிந்த வனப்பகுதிக்குள் நுழைந்தான்.

இரை தேடும் சிறுத்தையைப் போல் சந்தடியின்றிச் செடி கொடிகளை விலக்கிக் கொண்டு காட்டினுள் நடந்த ஜெயந்தனின் காலடியில் மிதிபடாமல் தப்ப பூச்சிகளும், பாம்புகளும் விலகி ஓடின.

காட்டின் நடுப்பகுதிக்கு வந்தவன், பந்தங்கள் சில எரிந்து கொண்டிருப்பதையும் வீரர்கள் சிலர் உலவுவதையும் மறைவிலிருந்து கவனித்தான். நடுவே தெரிந்த உயர்ந்த கூடாரத்தையும் பார்வையால் அலசினான்.

'இருபத்தைந்திலிருந்து முப்பத்தைந்து வீரர்கள் வரை இருக்கலாம்' என்று கணித்தவன், கவனமுடன் மேலும் சற்று நெருங்கிச் சென்று கூடாரத்தின் உட்பகுதியில் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அமர்ந்திருந்த மாறவர்மனையும் கண்டான்.

பின்னர், வந்த வழியிலேயே வனத்தை விட்டு யாருமறியாமல் வெளியே வந்தவன் தன் புரவியை நோக்கி நடந்தான்.

ஒரே தாவலில் அதன் மேலேறிய ஜெயந்தனைச் சுமந்து கொண்டு அந்தப் புரவி காற்றை விட வேகமாகப் பறந்தது.

வீதிகளில் ஆங்காங்கே சில மக்கள் குவியத் தொடங்கியிருந்தனர். அதிகமாக இல்லாவிட்டாலும் ஆங்காங்கு சில நேர

விக்கிரமன்

ணங்களும் கொடிகளும் காற்றில் அசைந்து கொண்டிருந்தன.

மதுரை மக்களின் சுதந்திர உணர்வை அறிந்திருந்ததால் விக்கிரமன் ஆடம்பர வரவேற்பு ஏதும் அவசியமில்லை என முன்கூட்டியே செய்தி அனுப்பியிருந்தான்.

ஏற்கெனவே மக்களிடையே இருந்த கருத்து வேறுபாடுகள் குறித்தும் பாண்டிய தாயாதிகளிடையே புகைந்து கொண்டிருந்த போட்டிகளைப் பற்றியும் அறிந்திருந்த அமைச்சர் சோமேஸ்வரரின் மனம், அரண்மனை உச்சியில் படபடத்த புலிக் கொடியைப் போலவே படபடத்துக் கொண்டிருந்தது. திடீரென்று தோன்றிய மாறவர்மனும் அவன் பேசிய பேச்சும், மதுரை தெருக்களில் காணப்பட்ட சில ஈழ வீரர்களின் நடமாட்டமும் அவர் கவலையை அதிகரித்திருந்தன.

நான்கு புரவிகள் பூட்டப்பட்ட அந்தச் சோழ ரதம் கண்களைப் பறித்தது. தந்தத்தால் கடையப்பட்ட கால்களும், முகப்புக்களும் மதுரை மக்களின் மனங்களையும் கவர்ந்தன. ஏதோ தேவலோகத்திலிருந்து வந்தது போன்ற அந்த ரதத்தில் அமர்ந்து விக்கிரமனும் அம்மங்கையும் உடனிருந்த கார்குழலியும் மக்களைக் கைகூப்பி வணங்கினார்கள். அலங்கார ரதத்தின் கவர்ச்சியும் அகங்காரமற்ற இளவலின் அடக்கமும் இணைய, மெள்ளக் கிளம்பிய வாழ்த்துக் கோஷங்கள் வலுவடைந்து பெரிதாக ஒலிக்கத் தொடங்கி விண்ணை நிறைத்தன!

தூவப்பட்ட மலர்களையும் வாழ்த்துக்களையும் ஏற்ற மூவரும் ராஜவீதிகளைக் கடந்து அரண்மனையை அடைந்தனர். அங்கு வாயிலிலேயே மற்ற பிரதானிகளுடன் காத்து நின்ற சோமேஸ்வரர், முன்னே வந்து விக்கிரமனை வரவேற்றார். உடன் வந்த கார்குழலியின் முகச் சாயலைக் கண்ட அவர் உள்ளத்தில் மெலிதாக ஒரு குழப்பம் படர்ந்தது.

அரண்மனையின் வெளியே மக்களோடு மக்களாக நின்று கவனித்துக் கொண்டிருந்த மார்க்கீயனின் பழுப்பு விழிகளும் கார்குழலியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன.

நீராடி, உணவருந்தி சிரமப்பரிகாரம் செய்து கொண்டு வந்த விக்கிரமனுடன் நகரின் பலவித நிர்வாக விஷயங்களையும் மற்ற அரசாங்க விஷயங்களையும் பேசக் காத்துக் கிடந்தனர், சோமேஸ்வரரும் பிரதானிகளும்.

அம்மங்கைக்கும் கார்குழலிக்கும் அரண்மனையைச் சுற்றிப் பார்க்கவே நேரம் போதாமற் போயிற்று. கலை ஆர்வம் உடைய அம்மங்கை மதுரை அரண்மனையின் சிற்பங்களையும் சித்திரங்களையும் மற்ற வேலைப்பாடுகளையும் கண்டு பிரமித்துப் பார்த்தபடியே கார்குழலியுடன் சுற்றி வந்தாள்.

பல ஆண்டுகளுக்கு முன் எரிந்து போன அந்த அரண்மனை, அதன் பழைய அமைப்பு மாறாது புதுப்பிக்கப்பட்டிருந்ததால் ஒவ்வொரு அறையாக அதிசயத்தோடு பார்த்தபடியே வந்து கொண்டிருந்த கார்குழலியின் நினைவில், அந்த அரண்மனை புகைமூட்டத்தினூடே எரிந்த காட்சி படர்ந்தது.

ஓரிடத்தில் கார்குழலி சட்டென்று நின்றாள். அவள் அகன்ற விழிகள் சாளரத்தின் வழியே தெரிந்த விருந்தினர் மாளிகையின் மீது படிந்தன. சாளரத்தை நெருங்கி, கீழே நோக்கியவளின் பார்வையில் விரிந்தது ஒரு நந்தவனம். அவள் முகத்திலும் விழிகளிலும் படர்ந்த கனவுச் சாயலைக் கவனித்த அம்மங்கை மெல்ல அவளைப் பின்புறமாக நெருங்கினாள். திரும்பி நோக்கிய கார்குழலி, கனவில் பேசுபவளைப் போல் சொற்களை மெது



வாக உதிர்த்தாள் :

''அதோ அந்தச் செடிகளின் அருகேதான் நான் அமர்ந்து நெருப்பையும் புகையையும் கண்டு பயந்து அழுது கொண்டிருந்தேன். அதோ அந்த விருந்தினர் மாளிகையின் முகப்பிலிருந்து யாரோ ஒருவன் என்னை நோக்கி ஓடிவந்து என்னைத் தூக்கிக் கொண்டான். அவனுடைய பெரிய மீசையையும் உருவத்தையும் கண்டு நான் மேலும் கதறி அழுதேன். சுற்றிலும் வாட் போர் நடந்து கொண்டிருந்தது. என்னைப் புரவி மீது அமர்த்தித் தாவியேறியவன் எங்கோ என்னைக் கொண்டு சென்றான். அப்போது எனக்குப் புரிந்தது அவ்வளவுதான். இத்தனை ஆண்டுகள் கழித்து மீண்டும் அதே இடத்தைப் பார்க்கிறேன்.''

கார்குழலியின் மனோநிலை அம்மங்கைக்குத் தெளிவாகவே, அவள் ஆறுதலாக, ''கார்குழலி, வா, நாம் மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தையும் அழகர் ஆலயத்தையும் கண்டு வரலாம்'' என்றபடி அவளை அந்த இடத்தை விட்டு இழுத்துக் கொண்டு விக்கிரமனிருந்த பகுதி நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

ஆலோசனை மண்டபத்திலிருந்து உச்சிப் பொழுதில் விடுபட்ட விக்கிரமன், அம்மங்கை கூறியதை உடனே ஏற்றான்.



**உ**ச்சி காலப் பூஜை ஆலயத்தில் அதி விசேஷமாக ஏற்பாடாகியிருந்தது. அபிஷேகமும் ஆராதனையும் கண்டு மனம் குளிர்ந்து போன அம்மங்கை ஆலயத்தின் பெரும் தூண்களையும் அதன் சிற்பங்களையும் கண்டு மலைத்தாள். கலை வடிவங்களைக் காண ஒருநாள் போதாது என்று முடிவு கட்டிய அம்மங்கை அதே நேரத்தில் உடன் வந்த கார்குழலியின் அகன்ற விழிகள், சற்றுத் தள்ளி வந்து கொண்டிருந்த விக்கிரமன் மீது அடிக்கடி பாய்ந்து பாய்ந்து மீண்டு கொண்டிருப்பதையும் கவனிக்கத் தவறவில்லை! அதுவரை அனுபவித்தறியாத உணர்வைச் சமீப காலமாக உணர்ந்த விக்கிரமன், கார்குழலியின் பார்வையைச் சந்தித்த போதெல்லாம் உடல் சிலிர்த்தான்.

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்ட அம்மங்கை ''அண்ணா'' என்று கூவினாள்.

மிதந்து கொண்டிருந்த கனவுலகிலிருந்து திடுக்கிட்டுத் திரும்பிய விக்கிரமன், ''என்னம்மா?'' என்று அன்புடன் வினவினான்.

''இங்கேயே இத்தனை காலம் கடத்தினால் நாம் அழகர் ஆலயத்திற்குச் செல்வது எப்போது?'' என்றாள் அம்மங்கை.

ஆலயத்துச் சிற்பங்களைத்தான் ரசித்துக் கொண்டே இருந்ததால்தான் நேரம் அதிகமாக ஓடிவிட்டதென்பதைப் புரிந்து கொள்ளாதது போலவும், ஏதோ விக்கிரமனால்தான் தாமதமாகி விட்டது என்பது போலவும் பேசிய அம்மங்கையின் குறும்பு படர்ந்த முகத்தைக் கவனித்த விக்கிரமன், ''அழகரை நாளை பார்த்துக் கொள்ளலாமே?'' என்றான்.

''முடியாது நான் இன்றே பார்த்தாக வேண்டும்'' என்ற அம்மங்கையின் பிடிவாதத்தை அறிந்திருந்த விக்கிரமன், ''எனக்கு இன்னும் சில முக்கியமான பணிகள் இருக்கின்றன. வேண்டுமானால் நீங்கள் இருவரும் சென்று வாருங்கள்'' என்றான், அரச குடும்பத்துத் திட்டங்களைப் பொது இடத்தில் பேசக் கூடாது என்ற விதியை மறந்து.

அம்மங்கையையும் கார்குழலியையும் ரதமொன்றில் ஏற்றி உடன் இருபது வீரர்களையும் அனுப்பி வைத்தான். அந்த ரதம் ராஜவீதியைக் கடக்குமுன்பே வேறொரு புரவி வீரன் அழகர் ஆலயத்தை நோக்கிப் பறந்து சென்று கொண்டிருந்தான்.

விக்கிரமனோ பின்னாலிருந்து ''இளவரசே'' என்று அழைத்த பரிச்சயமான குரலைக் கேட்டுத் திரும்பினான். அவன் எதிரே வணங்கி நிமிர்ந்தான் ஜெயந்தன்.

**மா**லைப் பொழுது கவிந்து விட்டதால் காட்டின் மரங்களைத் தேடித் திரும்பிக் கொண்டிருந்த பறவைகளின் கூச்சல் காதைப் பிளந்தது. மூலிகைகளின் மணமும், மலர்களின் மணமும் அந்த மலைப் பகுதியை நிறைத்தன.

கூடாரத்தின் வாயிலில் வீரர்கள் சிலர் காவலிருக்க, உள்ளே விவாதமொன்று நடந்து கொண்டிருந்தது.

''இது நடக்குமா மார்க்கியோ?'' - மாறவர்மனது குரலில் அவநம்பிக்கை பூரணமாக ஒலித்தது. ''விக்கிரமன் வாளாயிருப்பானா?''

''அவன் வரவில்லை. இரு இளவரசிகளு[illegible]ய் வந்து கொண்டிருக்கிறார்கள்.''

''[illegible]மையாகவா?''

''ஆம். உடன் சோழ வீரர்கள் இருபது பேரும் வருகிறார்கள்.''

''அவர்களைப் பற்றிக் கவலையில்லை; சன்னிதிக்குள் இளவரசிகளுடன் செல்ல மாட்டார்கள். மரியாதையுடன் வெளியேதான் காவலிருப்பார்கள்.''

''அஞ்ச வேண்டாம் மாறவர்மரே. நீங்கள் நமது வீரர்களுடன் மதிலை அடுத்த மரங்களின் மறைவில் நில்லுங்கள். நான் சன்னிதியில் கதவுகளின் பின் மறைந்து கொள்கிறேன். இரு இளவரசிகளும் உள்ளே நுழைந்ததும் கதவுகளை மூடி விடுகிறேன். நமது வீரர்கள் காவலுக்கு நிற்பவர்கள் மீது பாயட்டும். அவர்களைத் தீர்த்ததும் நான் இருவரையும் வெளியில் இழுத்து வருகி

## அருள்வாக்கு

**ஸ**மூஹத்தில் உள்ள அத்தனை பேரும் ஒரு காலணா அரையணாவாவது போட்டு எல்லோருமாகச் சேர்ந்தே பொதுக் கார்யங்களுக்கான செலவுகளை ஏற்க வேண்டும். பணக்காரன் பணம் மட்டும் கொடுத்து விட்டு, சரீரத்தால் உழைக்காமலிருந்தான் என்று இருக்கக் கூடாது; ஏழை சரீரத்தால் மட்டும் உழைத்து விட்டுப் பணம் கொடுக்காமல் இருந்தான் என்றும் இருக்கக் கூடாது. பணக்காரன் ரூபாய் தருவதும், ஏழை சரீர கைங்கர்யம் செய்வதும் பெரிய த்யாகமில்லை. பணக்காரன் ஏழைகளோடு வந்து நின்று கொண்டு மண்வெட்டி எடுத்து வெட்ட வேண்டும்; ஏழை தன் கூழுக்கு ஒரு மிளகாய் வாங்கிக் கொள்வதற்குப் பதிலாகக் காலணா டொனேஷன் கொடுக்க வேண்டும். அதுதான் பெரிசு. ஸோஷல் ஸர்வீஸ் பண்ணும்போதே



பண்ணுகிறவர்கள் மனசில் உயர்ந்து வளர வேண்டுமானால் செலவு, உழைப்பு இரண்டிலுமே ஒவ்வொருத்தனுக்கும் பங்கு இருக்க வேண்டும். ச்ரமதானத்துக்கு பலஹீனர்கள் மட்டுமே எக்ஸெம்ப்ஷன்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

றேன். இருவரையும் காட்டுக்குள் கவர்ந்து சென்று விட்டால் உங்களுக்கு அரியணை கிடைக்கத் தடையாக இருப்பவளை நீங்களே ஒழித்துக் கட்டலாம்!'' - சுருக்கமாகத் திட்டத்தை விவரித்த மார்க்கியன், ''அவர்கள் நெருங்கிக் கொண்டிருப்பார்கள். நான் முன்னால் செல்கிறேன்'' என்றபடி எழுந்து வெளியில் வந்தான்.

தன் உதவியாளன் ஒருவனை அழைத்தவன், சுருக்கமாக அவனிடம் சில விவரங்கள் கூறி விட்டு ஆலயத்தை நோக்கி விரைந்தான்.

சற்று நேரத்தில் பாண்டியரும், ஈழத்தவரும் கலந்த அந்தக் கதம்பப் படை மரங்களினூடே நகர்ந்து கோயில் மதிலை அடுத்து வளர்ந்திருந்த அடர்ந்த மரங்களின் பின்னே பதுங்கியது. அவர்களில் ஒருவனாக நின்றிருந்த மாறவர்மனது முகத்தில் அப்பொழுதும் அவநம்பிக்கையே தெரிந்தது.

இருள் கவியத் தொடங்கியது. அறிவிப்பு இன்றி வந்து நின்ற அரண்மனை ரதத்தைக் கண்ட ஆலய பட்டர் அவசர அவசரமாக வாயிலை நோக்கி விரைந்தார். ரதத்துடன் வந்த வீரர்களையும் ரதத்திலிருந்து சோழ இளவரசி அம்மங்கை அழகிய இன்னொரு பெண்ணுடன் இறங்கியதையும் கண்ட அவருக்குத் திகைப்பில் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை.

'இத்தனை அமைதியான சூழலில் இத்தனை அழகிய ஆலயமா' என்று இரு இளவரசிகளும் வியப்பு பரவிய விழிகளுடன் ஏறெடுத்துப் பார்த்தனர். ஆலயத்தின் கலைச் சிறப்புக்களைப் பகல் பொழுதில் மீண்டும் வந்து காண வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள் அம்மங்கை. அவளையும் கார்குழலியையும் அடக்கமுடன் கைநீட்டி வரவேற்றபடியே பட்டர் சன்னிதியினுள் நுழைந்தார்.

பூரண அலங்காரத்துடன் நின்றிருந்த அழகர், என்றும் மாறாத அதே புன்னகையுடன் திகழ்ந்தார். அம்மங்கையின் விழிகளும் மனமும் அழகரிடம் ஒன்றிப் போயின.

பாசுரமொன்றைப் பாடியவாறு அழகரின் காலடியில் அமர்ந்திருந்தார் இன்னொரு பட்டர். ஆலய பட்டரின் வீடு தேடி இரு தினங்களுக்கு முன் வந்த விருந்தாளியாக இருக்க வேண்டும்.

சன்னிதியின் பெரும் கதவுகள் படாரென்று சாத்தப்படும் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிய இளவரசிகளும் பட்டரும் அங்கே ஆஜானுபாகுவாக ஒருவன் நிற்பதைக் கண்டு திகைத்தனர். தீபங்களின் ஒளியில் பளபளத்த அவன் பழுப்பு விழிகளும், கீழ்நோக்கி வளைந்து நீண்ட அவன் மீசையும் இடையில் தொங்கிய பெரும் பட்டாக்கத்தியும் அவர்களுக்கு அச்சமூட்டுபவையாக இருந்தன.

பயத்தில் கூச்சலிட வாயைத் திறந்த அம்மங்கை, அவன் இடதுகரம் உயர ''உயிரின் மீது ஆசையிருந்தால் கூச்சலிட வேண்டாம்'' என்று கரகரத்த குரலில் கூறக் கேட்டு ஒலி எழுப்பும் சக்தியையே இழந்து நின்றாள்.

அவன் வலது கரம் இடையிலிருந்த வாளின் பிடியில் பதிந்து அதை மெல்ல உருவத் தொடங்கியது.

''ஆண்டவன் சன்னிதியில் வாளை உருவுவது தவறு அப்பனே!'' - கண்டிப்புடன் ஒலித்த குரலுடன் இணைந்து மார்க்கியனின் வலது கரத்தை இறுகப் பற்றியது ஒரு கை.

மார்க்கியன் தனது கரத்தை விடுவித்துக் கொள்ள முழு பலத்தைப் பிரயோகித்தும் இயலாமல் போகவே தன்னைச் சிறு குழந்தையொன்றைப் பிடிப்பது போல் புன்முறுவலுடன் பற்றியிருந்த பட்டரை பெரும் வியப்புடன் பார்த்தான். 'அழகர் காலடியில் அமர்ந்து பாசுரம் சொல்லிக் கொண்டிருந்தவர் எப்போது எழுந்து வந்தார்?' என்று திகைக்கவும் செய்தான்.

(தொடரும்)

# வில்லி உள்பாவாடைகள்

## புதுமைத்திட்டம் No. 3

**திட்டத்தின் விபரம்:-**

1. ரூ 300/- ஐ D.D அல்லது M.O மூலம் P.R.கார்மெண்ட்ஸ் என்ற எங்கள்நிறுவனத்திற்கு செலுத்துங்கள். இத்திட்டத்தில் - முதலில் வரும் 5000 உறுப்பினர்கள் மட்டுமே சேர்த்துக்கொள்ளப்படுவார்கள்.

2. பணம் கிடைக்கப் பெற்றவுடன் உடனடியாக ரூ 84/- மதிப்புள்ள இரண்டு **'வில்லி'** உள்பாவாடைகள் (Normal Size) உங்களுக்கு பதிவுத்தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பிவைக்கப்படும்.

3. நீங்கள் பணம் செலுத்தியதிலிருந்து ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் ரூ 84/- மதிப்புள்ள இரண்டு **'வில்லி'** உள்பாவாடைகள் (Normal Size) ஆண்டுக்கு ஒருமுறைவீதம் தொடர்ந்து ஆறு ஆண்டுகளுக்கு பதிவுத்தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பிவைக்கப்படும்.

4. பணம் கிடைக்கப்பெற்ற தேதியிலிருந்து 78 மாதங்கள் (6 1/2 ஆண்டு கள்) நிறைவு பெற்றவுடன் ரூ 600 /-ஆக உங்களுக்கு வழங்கப்படும்.

5. நீங்கள் பணம் செலுத்தியவுடன் ரூ 84/- மதிப்புள்ள இரண்டு **'வில்லி'** உள்பாவாடைகளுடன் (Normal Size) 6 1/2 ஆண்டுகள் கழித்து ரூ 600/- திரும்பபெறுவதற்கான REPAYMENT GAURANTEE CARD உடனடியாக வழங்கப்படும்.

| | நீங்கள் செலுத்தும் தொகை | பணம் செலுத்தியவுடன் | 1-ஆம் ஆண்டு இறுதியில் | 2-ஆம் ஆண்டு இறுதியில் | 3-ஆம் ஆண்டு இறுதியில் | 4-ஆம் ஆண்டு இறுதியில் | 5-ஆம் ஆண்டு இறுதியில் | 6-ஆம் ஆண்டு இறுதியில் | 6 1/2-ஆம் ஆண்டு முடிந்தவுடன் திரும்ப பெறும் தொகை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| Normal size அதிகபட்ச இடுப்பு சுற்றளவு 35" / 88 cms. | ரூ300/- | ரூ84/- மதிப்பு | ரூ84/- மதிப்பு | ரூ84/- மதிப்பு | ரூ84/- மதிப்பு | ரூ84/- மதிப்பு | ரூ84/- மதிப்பு | ரூ84/- மதிப்பு | ரூ600/- | ரூ1188/- |
| Spl. Size அதிகபட்ச இடுப்பு சுற்றளவு 40" / 102 cms | ரூ350/- | ரூ100/- மதிப்பு | ரூ100/- மதிப்பு | ரூ100/- மதிப்பு | ரூ100/- மதிப்பு | ரூ100/- மதிப்பு | ரூ100/- மதிப்பு | ரூ100/- மதிப்பு | ரூ700/- | ரூ1400/- |

**பங்கு கொள்வீர்!!** **பயன்பெறுவீர்!!**

**பணம் அனுப்ப வேண்டிய முகவரி : P.R.C கார்மெண்ட்ஸ், 86, பிரதட்சணம் ரோடு 'ஏ' பிளாட், கரூர் – 639 002, போன் : 21946.**

எங்கள் நிறுவனம் 1984–ல் பாரதப்பிரதமரின் படித்த இளைஞர்களுக்கான சுயவேலைவாய்ப்புத் திட்டத்தின் கீழ் **கரூர் கிளை கனரா வங்கியின்** பொருளாதர உதவியுடன் துவக்கப்பெற்று செயல்பட்டு வருகிறது.

குறிப்பு; (1) நீங்கள் செலுத்தும் தொகை முழுமையாக 65 ஆண்டுகளாக மக்கள் சேவையில் ஈடுபட்டிருக்கும் கரூர் THE LAKSHMI VILAS BANK LTD –ல் டெபாசிட் செய்யப்படும்.

(2) மேற்படி டெபாசிட் துகையிலிருந்து எங்கள் நிறுவனத்தின் நடைமுறை மூலதனத்திற்காக (WORKING CAPITAL) வங்கியிலிருந்து கடன்வசதி பெற்றுக்கொள்ளப்படும்.

(3) Spl. size (ஸ்பெஷல்சைஸ்) வேண்டுவோர் ரூ 350 செலுத்தவும்.

(4) உங்களுக்கு தேவையான கலர், மற்றும் அளவுகளை குறிப்பிட்டு எழுதினால் அதன்படி அனுப்பிவைக்கப்படும்.

(5) வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள் இத்திட்டத்தில் பங்கு கொள்ளலாம் **'வில்லி'** உள்பாவாடைகள் மற்றும் இதர கடித தொடர்புகள் அவர்களுடைய இந்தியாவில் உள்ள விலாசத்திற்கு மட்டுமே அனுப்பி வைக்கப்படும்.

**சென்னையில் தொடர்பு கொள்ள: S.V.கணபதி 15.சரவணா தெரு. T.நகர். சென்னை–600 017. காலை 10 மணி முதல் மாலை 6 மணி வரை Ph.44 03 54 P.P.**

MAYUR 135 R

24

உங்களுக்கென்று ஒரு லட்சியம் இருக்கிறதா? அதை எப்பாடுபட்டாவது அடைந்தே தீர வேண்டும் என்கிற ஆர்வம் இருக்கிறதா? சதாசர்வ காலமும் அதைப் பற்றியே கனவு கண்டு கொண்டிருக்கிறீர்களா?

நல்லது.

அதற்கான ஒரே வழி விடாமுயற்சி.

உதாரணம் நாசர். ஆம்; நடிகர் நாசரே தான்!

செங்கல்பட்டிலுள்ள சாதாரணமானதொரு குடும்பத்தில் பிறந்த நாசர் படித்தது பி.யு.சி. வரை. ''படித்துக் கொண்டிருக்கும்போதே நாடகங்களில் நடிப்பேன். என் தந்தையும் நான் நடிக்க ஊக்கப்படுத்துவார். ஆயினும் அப்போது நான் நடிகனாக வேண்டும் என்பதை லட்சியமாகக் கொண்டிருக்கவில்லை. அதனால், பி.யூ.சி. முடிந்ததும் ஏர்ஃபோர்ஸில் வேலைக்குச் சேர்ந்தேன். அது ஏனோ தெரியவில்லை; அந்தச் சூழ்நிலையும் அந்த வேலையும் எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் சேர்ந்த பத்தே மாதங்களில் ஏர்ஃபோர்ஸிலிருந்து விலகி வந்து விட்டேன்!

''விலகி வந்த பிறகுதான் எனது வாழ்க்கைப் பயணத்தை எந்தத் திசையில் தொடருவது என்று யோசித்தேன். அப்படி யோசித்து யோசித்து, நான் முடிவு செய்தது நான் நடிகனாக வேண்டும் என்பது. என் தந்தையும் என்னை ஊக்குவித்தார். அவரது ஆலோசனைப்படி சவுத் இண்டியன் ஃபிலிம் சேம்பரால் சென்னையில் நடத்தப்பட்ட ஆக்டிங் கோர்ஸில் சேர்ந்தேன்.

''அதை முடித்து விட்டு வெளியே வந்த போது, நான்தான் வருங்கால சிவாஜி என்கிற வண்ண வண்ணக் கனவுகளோடு சஞ்சரித்தேன். ஆனால் யதார்த்தம் வேறு விதமாகத் தென்பட்டது. ஒவ்வொரு சினிமா கம்பெனியாக ஏறியிறங்கினாலும் வாய்ப்புக் கிட்டியபாடில்லை!

''ஒருபுறம் லட்சியம். மறுபுறம் நடைமுறை வாழ்க்கையின் பயமுறுத்தல். இரண்டுக்கும் இடையில் என்ன செய்வது?

# விடாமுயற்சிக்கு ஒரு நாசர்



யோசித்தேன். நடைமுறை வாழ்க்கையைச் சமாளிக்காமல், லட்சியத்தை நோக்கிப் பயணம் செய்ய முடியாது என்பதை உணர்ந்தேன். அதனால் நட்சத்திர ஹோட்டல்களில் ஒன்றான தாஜ்கோரமண்டலில் வெயிட்டராகச் சேர்ந்தேன். நல்ல சம்பளம் கிடைத்தது; நடைமுறை வாழ்க்கை சுலபமானது! இருப்பினும் என்னுள் ஒரு குரல்! 'நாசர், உன் லட்சியம் என்னவானது?'

''சிறிது காலம் சென்று வெயிட்டர் வேலையை விட்டு விட்டு, அடையாறு திரைப்படக் கல்லூரியில் சேர்ந்தேன். சினிமாக் கலை நுணுக்கங்களையெல்லாம் துருவித் துருவிக் கற்றேன். இருப்பினும் வாய்ப்புகள் தேடி வந்து விடவில்லை! நானும் அதற்காகச் சோர்ந்து போய் விடவில்லை!

''லட்சியம் நிறைவேறும் வரை முயற்சியை விட்டு விடக் கூடாது என்பதில் தீவிரமாக



படம் : ஸ்ரீதர்

இருந்தேன். முயற்சி என்பது ஒவ்வொரு சினிமாக் கம்பெனியாக ஏறிப் போய் வாய்ப்புக் கேட்பது மட்டுமல்ல; அந்தத் துறை பற்றிய எனது அறிவை வளர்த்துக் கொள்வதும்தான் என்று உணர்ந்தேன். அதனால், அமெரிக்கன் கான்சலேட், பிரிட்டிஷ் கவுன்சில், மாக்ஸ்முல்லர் பவன் என்று எங்கெங்கெல்லாம் சினிமா சம்பந்தப்பட்ட நடிப்பு சம்பந்தப்பட்ட கலை நிகழ்ச்சிகள் நடக்கின்றனவோ, அங்கெல்லாம் சென்று நடிப்பு பற்றிய எனது அறிவை வளர்த்துக் கொண்டேன். நடிப்பு, சினிமா தொடர்பான ஏராள நூல்களைப் படித்தேன். பலருடன் விவாதித்து, எனது சினிமா அறிவை மேலும் கூர்மைப்படுத்திக் கொண்டேன். கூடவே, எந்த வேலையையும் கேவலமாக நினைக்காமல் செய்து, எனது வருமானத்திற்கும் வழி தேடிக் கொண்டேன்!

''இந்தச் சூழ்நிலையில்தான் பாலசந்தரிடம் உதவி இயக்குனராகப் பணியாற்றிய நண்பரொருவர் என்னை பாலசந்தரிடம் அறிமுகம் செய்து வைத்தார். அப்போது அவர் கன்னடப் படம் ஒன்று எடுத்துக் கொண்டிருந்தார். அதில் எனக்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று எண்ணிக் கொண்டுதான் அவரைப் பார்க்கச் சென்றிருந்தேன். அவரோ, 'பிறகு பார்க்கிறேன்!' என்று சொல்லியனுப்பி விட்டார்!

''மீண்டும் வாய்ப்புக்குக் காத்திருந்தேன். அப்போதுதான், தாம் எடுக்கும் 'கல்யாண அகதிகள்' படத்தில் என்னை நினைவு வைத்துக் கொண்டு அழைத்து, வாய்ப்புக் கொடுத்தார் பாலசந்தர். எனது லட்சியம் நிறைவேறும் சந்தோஷம். ஆனால் படம் எதிர்பார்த்த அளவில் வெற்றி பெறாததால் எனது சந்தோஷக் குமிழிகள் எழுந்த வேகத்திலேயே வெடித்துச் சிதறின!

''ஓ!'' என்று அலறும் நிலை. வாழ்க்கைச் சுமை. ஆயினும் எனது விடாமுயற்சியை விடவில்லை. மீண்டும் மீண்டும் முயற்சி செய்தேன்! அதன் விளைவாக வாய்ப்புகள் மீண்டும் வரத் துவங்கின. 'நாயகன்' படம் ஒரு திருப்பத்தைத் தந்து, எனது லட்சியத்திற்கு உரமூட்டியது!''

''இப்போது பிளஸ் பாயிண்டாக இருக்கும் உங்கள் மூக்கு, ஆரம்ப காலத்தில் உங்களுக்கு மைனஸ் பாயிண்டாகக் கூட இருந்திருக்குமே! எப்படிச் சமாளித்தீர்கள் நாசர்?''

''பலரும் எனது மூக்கைப் பார்த்து, 'இந்திரா காந்தி மூக்கு' என்று கிண்டல் செய்ததும் உண்டுதான். ஆயினும் நான் சோர்ந்து விடவில்லை. 'ஏதோவொரு வகையில் எனது மூக்கு மற்றவர்களின் கவனத்தை ஈர்க்கிறதே!' என்று சந்தோஷப்பட்டேன். அப்படி ஈர்ப்பதே எனது மூக்கின் பிளஸ் பாயிண்ட் என்று நினைத்துக் கொண்டேன்!'' என்று கூறும் நாசர் மீண்டும் மீண்டும் வலியுறுத்துவது இதுதான்!

''விடாமுயற்சி என்பது உங்கள் லட்சியத்திற்காக நீங்கள் படும் உடல் உழைப்பு மட்டுமல்ல; நீங்கள் எந்தத் துறையில் சாதனை படைக்க வேண்டும் என்று லட்சியம் வைத்துக் கொண்டிருக்கிறீர்களோ, அந்தத் துறை பற்றிய சகல விதமான அறிவையும் வளர்த்துக் கொள்வதும் அதிமுக்கியமானது!''

ஆக, நாலு கம்பெனிகளுக்கு இண்டர்வியூ சென்று வந்தும் வேலை கிடைக்கவில்லையெனில், அதற்குக் காரணம், நாட்டில் பெருகி விட்ட லஞ்ச ஊழலும் சிபாரிசும்தான் என்பது ஓரளவுக்கு வேண்டுமானால் உண்மையாக இருக்கலாமே தவிர, அதுவே முழுக்க முழுக்க உண்மை இல்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்!

எந்த வேலைக்கு நீங்கள் முயற்சி செய்கிறீர்களோ, அந்த வேலை பற்றி உங்களுக்கு என்னென்ன தெரியும் என்பதைப் பட்டியலிடுங்கள்; தெரியாததையும் பட்டியலிடுங்கள். பிறகு தெரியாதவற்றையும் தெரிந்து கொள்ளும் முயற்சியில் ஈடுபடுங்கள்; திறமையை வளர்த்துக் கொள்ளுங்கள்.

அப்புறம் பாருங்கள்! வேலை வாய்ப்புகள் உங்கள் வீடு தேடி வந்து காத்துக் கிடக்கும்!

– ஸ்ரீதர்

படம் : கோபிநாத்

அடுத்த வாரம் : சவால்களை வரவேற்கும் சாரதா!

## கிருஷ்ணா



அடி வயிற்றில் சுளீர் என்று வலி இழுக்க, வயிற்றைக் கைகளால் அழுத்தியபடி முன்புறம் குனிந்தான் வேலு.

ஒரு மாதமாக இப்படித்தான் விட்டுவிட்டு வலிக்கிறது. முன்னெல்லாம் எப்போதாவது தேர்தல் காலத்து அரசியல்வாதியாய்த் தலைகாட்டிய வலி, இப்போது ஒரு மணி நேரத்துக்கு ஒரு முறை வலிக்கிறது.

''என்னப்பா ரிக்ஷா?'' - அருகில் குரல் கேட்கவே நிமிர்ந்தான்.

ஒரு பெண்மணி எதிரில் நின்று கொண்டிருந்தாள். பார்த்தாலே பணக்காரக்களை தெரிந்தது முகத்தில். கோதுமை நிறத்தில் தோல். எதிரில் ஒட்டியிருந்த ஹீரோயின் பட போஸ்டரையும், அவளையும் ஒப்பிட்டான் வேலு.

''என்னம்மா, எங்கே போகணும்?''

''மதுரா நர்சிங்ஹோம் போகணும். எவ்வளவு கேட்கற?'' என்றாள் கம்பீரமாய்.

வேலுவுக்கு இந்தப் பெண்மணியின் சாயலும், கம்பீரமான குரலும் ரேஸ் குதிரையை ஞாபகப்படுத்தின.

சேட் வீட்டில் அவன் மனைவி வேலை செய்கிறாள். அவன் கூட ஓரிருமுறை அங்கு போயிருக்கிறான். அங்கு ரேஸ் குதிரை வளர்ப்பதைக் கவனித்திருக்கிறான்.

# உலை

அவன் மனைவி செல்விதான் சொன்னாள். ஒரு குதிரை விலை லட்ச ரூபாய்க்கும் மேலேயாம். குதிரை பளபளவென்று, பிடரி முடி சிலிர்த்து, கம்பீரமாய் நிற்கும்.

''நீங்க கொடுக்கறதைக் கொடுங்கம்மா'' என்றான், சற்றுத் தடுமாறி.

இந்தத் தொழிலில் இது ஒரு அம்சம். எல்லோரிடமும் கறாராகக் கூலி பேசக் கூடாது. சிலர் தாராளமாகக் கொடுத்துவிடுவார்கள்.

இந்த அம்மாவைப் பார்த்தால் சற்று இரக்க குணம் உள்ளவராகத் தெரிகிறார்.

''ஏறுங்கம்மா'' என்று ரிக்‌ஷாவை ஆடாமல் பிடித்துக் கொண்டான்.

''ஸ்கூட்டரில் வந்தேன். திடீர்னு நின்னு போச்சு. ஏன்னு தெரியலே, ப்ச''! என்றபடி அமர்ந்தாள் ரிக்‌ஷாவில்.

வேலுவுக்குச் சட்டென்று அந்தப் பெண்மணி யாரென்று தெரிந்து போயிற்று.

அந்த அம்மா ஒரு டாக்டர் என்று கேள்விப்பட்டிருக்கிறான். சில நாள், ஸ்கூட்டரில் இவன் ரிக்‌ஷா ஸ்டாண்ட் வழியே பறப்பதைக் கண்டு வியந்திருக்கிறான். அவ்வளவு வேகமாய் ஓட்டுவாள்.

ஏறி ரிக்‌ஷாவை மிதித்தான்.

வலி! வயிற்றைப் பிடித்து இழுத்தது. பல்லைக் கடித்துக் கொண்டான்.

மிதிக்க, மிதிக்க வலி பழகிப் போய் ரிக்‌ஷா ஓடியது.

''நிறுத்துப்பா!'' என்று அவள் சொல்லும் போதே பிரேக்கைப் பிடித்தான்.

கிரீச் என்ற ஒலியுடன் ரிக்‌ஷா நின்றது. ஆஸ்பத்திரி வாசலில் டோக்கனுடன் காத்திருந்தவர்கள் சற்று பரபரப்பாய் எழுந்து உள்ளே செல்ல ஆரம்பித்தனர்.

மீண்டும் வலி. பொறுக்க முடியாமல் கைகளால் வயிற்றை அழுத்திப் பிடித்தான். முகமெல்லாம் வேதனை.

பத்து ரூபாய் பணத்தை நீட்டியவள் இவன் முகம் காட்டிய வேதனையைக் கண்டு திடுக்கிட்டாள்.

''என்னப்பா?''

''தெரியல்லேம்மா! கொஞ்சநாளா வயித்தைப் பிசையற மாதிரி வலி'' என்றான் பரிதாபமாய்.

இரக்கத்துடன் அவனைப் பார்த்தாள்.

''சரி, உள்ளே வா! என்னன்னு பார்ப்போம்'' என்று இவள் முன்னே செல்ல, வயிற்றிலிருந்து கையை எடுக்காமல், லேசாகக் கூன் போட்டபடி இவனும் பின் தொடர்ந்தான்.

ஓர் அறையில் அவள் நுழைந்து பின்னால் வருமாறு சைகை காட்டினாள்.

ஒரு பெண் வந்து பேன், லைட் ஸ்விட்சுகளைத் தட்டிவிட்டாள்.

''உட்காரு'' என்று எதிரிலிருந்த சேரைக் காட்டினாள்.

இவனுக்கு உட்காரத் தயக்கமாய் இருந்தது.

''எத்தனை நாளா வலிக்குது?''

''ஆறேழு மாசமாய்'' என்று வலிவந்த கதையைச் சொல்லி முடித்தான்.

அவனை பெஞ்சில் படுக்கச் சொன்னாள். வயிற்றில் நாலைந்து இடங்களில் செங்குத்தாக விரல்களை வைத்து அழுத்தினாள்.

இரண்டு இடங்களில் அவள் அழுத்தும் போது முனகினான் வலியால்.

''காஸ்ட்ரிக் அல்சர் உனக்கு இருக்குப்பா'' என்றாள்.

வேலு புரியாமல் பார்த்தான்.

''குடிப்பியா?''

''ஐயையோ, அதுக்கெல்லாம் காசு ஏதும்மா. எப்பவாச்சும் ஒசியிலே கிடைச்சா....''

''காலையிலே என்ன சாப்பிட்டே?''

தலைகுனிந்தான்.

''சரி, நான் மாத்திரை கொடுக்கறேன் மூணு நாளைக்கு. எழுதியும் தரேன். திரும்பவும் வலிக்கும் போது போட்டுக்க'' என்றவளை நன்றியுடன் பார்த்தான்.

''காப்பி, டீ பக்கமே போகக் கூடாது, என்ன? காரமே சாப்பாட்டுல கூடாது.''

''ஐயையோ! டீ தானேம்மா பாதி நாள் சாப்பாடே!''

''அதான் சொல்றேன். பசி நேரத்துல வெறும் டீயைக் குடிச்சதுனால வாயு உண்டாகி வயித்துல புண்ணாயிடுச்சு'' என்றாள் இவனுக்குப் புரிய வேண்டுமே என்று தட்டுத்தடுமாறி தமிழில்.

மாத்திரையை ஒரு கவரில் போட்டுக் கொடுத்தாள். கூடவே ஒரு சீட்டில் எழுதிக் கொடுத்தாள்.

''சாப்பிட்டதுக்கு அப்புறம்தான் இந்த மாத்திரைகளைச் சாப்பிடணும். ஒரு நாளைக்கு மூன்று வேளை சாப்பிடு, என்ன?'' என்று சொன்னவளைக் கையெடுத்துக் கும்பிட்டான்.

மீண்டும் ரிக்‌ஷா நிறுத்திய இடத்துக்குத் திரும்பினான் யோசனையாய்.

''சாப்பிட்டதுக்குப் பின்னாடி மாத்திரையைப் போட்டுக்க'' என்று டாக்டர் சொன்ன வார்த்தைகள் அவனைக் குழப்பின.

**பிறந்த குழந்தைகள் என்னதான் அழுதாலும் கண்ணீர் மட்டும் வராது. காரணம்....?**
**.... 30 ஆம் பக்கம் பாருங்கள்!**

"ஒரு வேளை சோற்றுக்கே தாளம், ஹூம்!" என்ற பெருமூச்சு அவனுள்ளிருந்து புறப்பட்டது.

அப்போதுதான் டாக்டர் ரிக்ஷாவில் வந்ததற்குக் கூலி கொடுக்காதது ஞாபகம் வந்தது.

திரும்பிப் போய்க் கேட்கலாமா என்ற தயக்கத்துடன் உள்ளே நோக்கினான்.

"என்னப்பா, ரிக்ஷா வருமா!" என்று அருகில் குரல் கேட்டது.

ஒரு பெரியவரும், கூடவே ஒரு பெண்ணும்.

டாக்டரிடம் கூலியைக் கேட்கக் கூச்சம். கேட்டால் தப்பாய் எடுத்துக் கொள்வார்களோ? ஆனால் கண்முன் தோன்றி மறைந்த அந்த பத்து ரூபாய் நோட்டை விடவும் மனசில்லை.

"என்னப்பா? தூங்கறியா?"

"எங்கே சார் போவணும்?" என்றான் லேசான ஏமாற்றத்துடன்.

சொன்னார்கள். ஏறி அமர்ந்தார்கள்.

"டாக்டர் பீஸ் இருபது ரூபாய் ஆயிடுச்சு. இன்னும் மாத்திரை, மருந்து வேற வாங்கணும். அது வந்துடுமே நாற்பது, ஐம்பதுன்னு. இந்த மாசம் கடன்தான் வாங்கிச் சமாளிக்கணும்" என்றார் அந்தப் பெரியவர் கவலையான குரலில்

வேலுவுக்குத் துணுக்கென்றது. டாக்டர் ஃபீஸ் இருபது ரூபாயா? தன்னிடம் ஒரு பைசா கூட வாங்கிக் கொள்ளவில்லை. மாத்திரை வேறு கொடுத்திருக்கிறார்.

அவன் மனசில் நிம்மதி.

நல்ல வேளை! அல்பத்தனமாய்க் கூலியைப் போய்க் கேட்கவில்லை.

அவர்களை இறக்கி விட்டதும் மூன்று ரூபாய் கூலி கிடைத்தது.

வயிற்றில் மீண்டும் வலி. வேலு மாத்திரையைப் பார்த்தான்.

அய்யர் கடையில் இட்லி வாங்கிச் சாப்பிடலாமா? என்று யோசித்தான்.

டாக்டர் சொல்லியிருக்கிறாரே, ஏதாவது சாப்பிட்டபின்தான் மாத்திரையை முழுங்க வேண்டும் என்று.

வேண்டாம்! வீட்டுக்குப் போகலாம்.

செல்வி சேட் வீட்டிலிருந்து பழைய சோறு ஏதாவது எடுத்து வந்திருக்கலாம்.

**பிறந்த குழந்தைகளுக்குக் கண்ணீர் சுரப்பிகள் வளர்ந்து செயல்படுவதற்குக் குறைந்தது பதினைந்து நாட்களாவது ஆகும். அதுவரை அவை அழுதாலும் கண்ணீர் வராது!**

**- ஆர். பார்த்திபன்**

மூன்று ரூபாயை அவளிடம் கொடுத்தால் ராத்திரி சாப்பாட்டுக்கு உதவும். மகன் ராகவுக்கு ஏதாவது வாங்கித் தரலாம், பாவம்!

ரிக்ஷாவை மிதித்தபடி வீட்டை நெருங்கினான். வீட்டுக்குள் பேச்சு சப்தம் கேட்டது.

"இதோ என் புருஷன் வந்துடுச்சு" என்றாள் செல்வி பரவசமாய்.

சேட் வீட்டு அம்மா நின்று கொண்டிருந்தாள், அவன் குடிசையின் உள்ளே.

"மச்சான், அம்மாவுக்குக் கலர் வாங்கிட்டு வா. ஓடு!"

"வேணாம் செல்வி."

"சும்மா இருங்கம்மா. வராதவக வந்திருக்கீக" என்று இவனை விரட்டினாள்.

கடையில் கலர் பாட்டில் விலை கேட்டான். இரண்டரை ரூபாய் கொடுத்து ஆரஞ்சு கலர் பாட்டிலை எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கி ஓடினான்.

"அந்த உறிஞ்சற குழாய் கொண்டாரலியா?"

"பரவாயில்லை செல்வி" என்று பெருந்தன்மையுடன் அந்த அம்மாள் பாதி பாட்டிலைக் குடித்துவிட்டு மீதியை மிச்சம் வைத்தாள்.

"மதியமே வேலைக்கு வந்துடு செல்வி. அதைச் சொல்லிட்டுப் போலாம்னுதான் வந்தேன். சாயந்திரம் ஊருக்குப் போறோம்" என்றபடி விடை பெற்றாள்.

"டேய் ராகு" என்று மகனை அழைத்து, பாட்டிலில் மீதமிருந்த கலரைக் கொடுத்தாள் செல்வி.

அவனும் சந்தோஷமாய் அதைக் குடித்தான்.

"செல்வி, பழைய தண்ணி, சோறு ஏதாச்சும் இருக்குதா?"

"இல்லியே மச்சான். மதியம் சேட்டு வீட்டுக்குப் போறேன்ல. அவுக ஊருக்குப் போறதுனால நிச்சயமா மிஞ்சற சோறு கிடைக்கும்" என்றாள் நம்பிக்கையுடன்.

வேலு சோர்வுடன் வெளியே நடந்தான்.

வயிற்றில் வலி பிசைந்தது. கை அனிச்சையாய் வயிற்றை அழுத்திப் பிடித்தது.

கால்கள் நேராக நாயர் கடையை நோக்கிச் சென்றன.

"என்னப்பா வேலு, சாயா போடவா?" என்று வரவேற்றார்.

டீ குடிக்காதே என்று டாக்டர் சொன்னது நினைவில் ஆடியது.

வயிற்றில் வலி ஒரு பக்கம், பசி ஒரு பக்கம். சிங்கிள் டீ அடித்து, ஒரு பீடி புகைத்தால் இரண்டு மணி நேரத்துக்குப் பசிக்காது.

தலையை ஆட்டினான் வேலு, நாயரைப் பார்த்து.



# கொளுத்தும்
# ‘கூலான’ கு

அதிகச் செலவின்றித் தயாரிக்கக்கூடிய இந்த உணவு வகைகள் வெயில் காலத்துக்கு ஏற்றவை; இவற்றைத் தயாரிப்பதும் சுலபம்... “பரீட்சை முடிந்து விட்ட இளம் பெண்களும் ஆண்களும் இவற்றைச் செய்து பார்க்கலாம்; விடுமுறையை ரசித்து ருசிக்கலாம்!” என்கிறார் மல்லிகா.



ஐந்து வருடங்களில் ஆறு சமையல் புத்தகங்கள் எழுதியுள்ளார் மல்லிகா!



## தக்காளி, புதினா காக்டெயில் ஸ்குவாஷ்

தக்காளி ஜூஸ் - 2 கப் (சுமார் ½ கிலோ தக்காளி)
சர்க்கரை - 3 கப்
தண்ணீர் - 1½ கப்
உப்பு - 1 டீஸ்பூன் (தலைதட்டி)
மிளகு, சீரகப் பொடி - ¼ டீஸ்பூன்
புதினா இலை - ½ கப்
எலுமிச்சம் பழம் - 4



# டைக்குக்
# புகள்!



சிட்ரிக் ஆசிட் - 1 டீஸ்பூன்

சோடியம் பென்ஸோயேட் (SB) - 1/4 டீஸ்பூன்

நன்கு பழுத்த தக்காளியைக் காம்பு நீக்கிப் பெரிய துண்டுகளாக்கவும். ஒரு மத்தின் உதவியால் லேசாக மசித்து அடி கனமான பாத்திரத்திலிட்டுக் குறைந்த தீயில் சில நிமிடங்கள் வேகவைக்கவும். அடுப்பிலிருந்து இறக்கி, குளிர் வடைந்தபின் மிக்ஸியில் ஜூஸ் எடுத்து வடிகட்டவும். ஜூஸ் இரண்டு கப்புக்குக் குறைவாக இருந்தால் சர்க்கரையின் அளவைக் குறைத்துக் கொள்ளவும். எலுமிச்சம் பழத்தின் ஜூஸ் எடுத்து ஒரு ஸ்பூன் சர்க்கரை சேர்த்து வைக்கவும். அளந்து வைத்த சர்க்கரை, தண்ணீருடன் சிட்ரிக் ஆஸிட், கழுவிய புதினா இலை, உப்பு, மிளகு, சீரகப் பொடி எல்லாம் கலந்து அடுப்







பில் வைத்து நன்கு கொதிக்க விடவும். ஒரு சில நிமிடங்கள் கொதித்தபின் இறக்கி, குளிர விடவும். ஒரு மெல்லிய மஸ்லின் துணியால் வடிகட்டி அதோடு தக்காளி, எலுமிச்சை ஜூஸ், சோடியம் பென்ஸோயேட் சேர்த்துக் கலந்து சுத்தமான ஈரமில்லாத பாட்டிலில் ஊற்றவும். தேவையான போது ஒரு பங்கு ஜூஸுடன் மூன்று பங்கு குளிர்ந்த நீர் சேர்த்துப் பருகலாம். உடனடி உபயோகத்துக்கு எனில், தேவையான பழங்களோடு சில புதினா இலைகள் அரைத்து வடிகட்டி, சர்க்கரை, எலுமிச்சை ரசம் சேர்த்து உடனே அருந்தலாம். சர்க்

கரை குறைந்து தேன் சேர்த்தால் ருசி கூடும். இதே போல் தர்பூசணிப் பழச் சாறுடன் புதினா, எலுமிச்சை சேர்த்தும் அருந்தலாம்.

## முளை கட்டிய பயறு சாலட்

முளைகட்டிய பாசிப் பயறு - 2 கப்
வெள்ளரிப் பிஞ்சு - 3
வறுத்த மோர் மிளகாய் - 3
துருவிய தேங்காய் - 2 டேபிள் ஸ்பூன்
எலுமிச்சம் பழம் - 2 (சிறியது)
உப்பு - தேவையான அளவு

பாசிப் பயறை 24 மணி நேரம் தண்ணீரில் ஊறவைக்கவும். வடிகட்டி அதை ஒரு மெல்லிய துணியில் மூட்டை போல் கட்டவும். சிறிது நீர் தெளித்து ஒரு கிண்ணத்தில் போட்டு மூடி வைக்கவும். அவ்வப்போது சிறிது நீர் தெளிக்கவும். ஒரு நாள் கழித்து நன்கு முளை விட்டிருக்கும்.

வெள்ளரிப் பிஞ்சைத் தோல் சீவிச் சன்னமாக நீளவாக்கில் அரியவும். அதோடு முளை பயிறு, தேங்காய்த் துருவல், உப்பு, வறுத்த மோர் மிளகாய் கிள்ளிப் போட்டு எலுமிச்சம் பழம் பிழிந்து குலுக்கி வைக்கவும்.

## தர்பூசணி, கடல்பாசி சாலட்

தர்பூசணிப் பழச்சாறு - $1\frac{1}{2}$ கப்
கடல்பாசி எனப்படும் சைனாகிராஸ் - 10 கிராம் (இது முற்றிலும் சைவ உணவு. அயோடின் சத்து நிறைந்தது. விலை 100 கிராம் 3 ரூபாய் அளவு இருக்கும்.)
சர்க்கரை - $\frac{3}{4}$ கப்
பொடியாக அரிந்த
பழவகைகள் - $1\frac{1}{2}$ கப்
(ஆப்பிள், வாழை, இனிப்பு திராட்சை, பப்பாளி போன்றவை. பைன் ஆப்பிள் சேர்க்க வேண்டாம்.)
தண்ணீர் - $1\frac{1}{2}$ கப்
Ring mould எனப்படும் வட்ட வடிவக் கிண்ணம் (ஜெல்லி செய்வது)

சைனாகிராஸை பொடியாக அரிந்து $\frac{1}{2}$ கப் தண்ணீர் ஊற்றி ஒரு மணி நேரம் ஊறவைக்கவும். பிறகு நன்றாகக் கையாலோ, மிக்ஸியிலோ மசிக்கவும். அடிகனமான பாத்திரத்தில் ஒரு கப் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சுடவைக்கவும். தண்ணீர் கொதிக்க ஆரம்பிக்கும் போது மசித்த சைனா க்ராஸைக் கொட்டி, குறைவான தீயில் விடாமல் கிளறவும். அது முற்றிலும் கரைந்த பிறகு சர்க்கரை சேர்க்கவும். சர்க்கரை கரைந்ததும் அடுப்பிலிருந்து இறக்கி, தர்பூசணி ஜூஸ், மற்றும் அரிந்த பழ வகைகளைச் சேர்க்கவும். ரிங் மோல்ட் கிண்ணத்தில் சிறிது வெண்ணெய் தடவி, சிறிது தண்ணீர் தெளித்து இக் கலவையை ஊற்றவும். குளிர்சாதனப் பெட்டி இருந்தால் அதில் வைக்கலாம். இல்லாவிட்டாலும் சைனாக்ராஸ் இருப்பதால் கலவை கெட்டிப்பட்டு விடும். கெட்டிப்பட்டவுடன் கிண்ணத்தை ஒரு தட்டில் தலைகீழாகத் திருப்பிக் கொட்டவும்.

கேக் போன்ற இந்த பழ சாலட்டை விருப்பப்படி அலங்கரித்துப் பரிமாறலாம்!

- நிர்மலா சக்ரவர்த்தி



ஒரு சமயம் முல்லா செல்வந்தர் ஒருவரிடம் நன்கொடை வாங்கச் சென்றார். முல்லாவின் வருகையை அறிந்த செல்வந்தர், தன் உதவியாளரிடம், "நான் வெளியே சென்று விட்டதாகக் கூறிவிடு" என்றார். அதன்படியே உதவியாளர் கூறினார். இதையெல்லாம் மாடியிலுள்ள ஜன்னல் வழியே செல்வந்தர் பார்த்துக் கொண்டிருந்தார். இதை முல்லா கவனித்துவிட்டுக் கோபத்துடன், "இனிமேல் உன் எஜமான் வெளியே செல்லும் போது மாடி ஜன்னலில் உள்ள தலையையும் பின்னோடு அழைத்துப் போகச் சொல்லு! இல்லையென்றால் உன் எஜமானை 'முண்டம் போகிறது' என்று ஊரார் கேலி பண்ணுவார்கள்!" என்று கூறிவிட்டு நடந்தார்.

ஆதாரம் : 'முல்லாவின் வேடிக்கைக் கதைகள்'

- என். ஜெயராமச்சந்திரன்


YOU
DESERVE
THE
BEST
KINETIC HONDA
THE FUTURE BELONGS TO US

**5**

“என்ன நித்யா இது? இது உனக்கே நன்னாயிருக்கா?''

தனது புத்தகங்களடங்கிய அட்டைப் பெட்டிகளைக் கயிற்றினால் இறுக்கிக் கட்டிக் கொண்டிருந்த நித்யா தலையை நிமிர்த்தி, பார்வதியைப் பார்த்தாள்.

''ஏம்மா?''

''இப்போ நீ தனியாப் போயிடுன்னு உன்னை இங்கே யாராவது சொன்னாளா? ஒரே குடும்பத்துல இருக்கிறவா வேற வேற கம்பெனிகளில வேலை பார்க்கிறதில்லையா என்ன?''

''அவன் வேறே எந்தக் கம்பெனியிலயாது வேலைக்குப் போய்ச் சேர்ந்திருந்தால், நான் தனியாப் போயிருக்க மாட்டேன்.''

நெற்றியில் அரும்பியிருந்த வியர்வைத் துளிகளைப் புடைவைத் தலைப்பால் ஒற்றி எடுத்தாள். பார்வதியின் முகத்தைப் பார்க்கவும் பரிதாபமாகயிருந்தது.

''ஏம்மா வருத்தப்படறே? துர்க்கா கல்யாணமாகித் தனியாப் போகலை? அது போல நானும் போறேன்னு வெச்சுக் கோயேன். நான் எங்கே, ரொம்ப தொலைவுக்கா போறேன்? காந்தி நகர்லேர்ந்து பெஸன்ட் நகர் போறேன் - அவ்வளவு தானே?''

''துர்க்கா மாதிரி நீயும் கல்யாணம் பண்ணிண்டு போயிருந்தாயானா நான் நிஜமாகவே சந்தோஷப்பட்டிருந்திருப்பேன். நீதான் ஒரேயடியா இப்போ கல்யாணமே வேண்டாங்கறே.''

நித்யா பேசவில்லை.

வாசலில் கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது.

''துர்க்கா வராப் போலே இருக்கு'' என்று கூறிக் கொண்டே வாசற்கதவைத் திறந்தாள் பார்வதி.

வந்தது துர்க்காதான்.

கல்யாணமாகி இந்த நான்கு மாதங்களில் உடலில் ஒரு பொலிவு ஏற்பட்டிருந்தது.

''ராமன் சொன்னான் நீ வேற ஜாகை பார்த்துண்டு போறேன்னு. நீ ரொம்பவும் 'மெலோடிராமாடிக்'கா நடந்துக்கறே நித்யா!'' முகத்தைக் கைக் குட்டையால் ஒற்றியவாறு கூறினாள் துர்க்கா.



# பனிப்பாறை

# ஆபஸ்தம்பன்

நித்யா அதைக் காதில் வாங்காதவள் போல் சகஜமாகப் புன்னகை புரிந்தாள்.

''என்ன துர்க்கா? ஷாப்பிங் போயிட்டு வர்றியா?''

பெட்டிகளைச் சுவரோரமாக வைத்தவள் துர்க்காவின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள். துர்க்கா, முகத்தில் விரோத பாவம் கொப்புளிக்க உட்கார்ந்திருந்தாள்.

''சந்தோஷமா இருக்கியா துர்க்கா?''

பழைய குதூகலம் துர்க்காவைப் பற்றிக் கொண்டது.

''ஓ! என்ன கேள்வி இது? விசுவத்தோட மனைவியானப்புறம் சந்தோஷத்துக்குக் கேக்கணுமா என்ன? வாரம் ஒரு புடைவை வாங்கித் தர்றார். சினிமா பார்க்கவே முடியலையேன்னு ஒரு நாள் சொன்னேன். உடனேயே வீ.சி.ஆர் வாங்கிண்டு வந்தாச்சு! தினமும் ரெண்டு படம் பார்க்கிறேன். நேத்தைக்குச் சமையலுக்கு ஒரு மாமியையும் ஏற்பாடு பண்ணிட்டேன்.''

''என்னடி துர்க்கா இது? ரெண்டு பேருக்குச் சமைக்க ஒரு சமையற்காரியா?'' பார்வதி ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''போம்மா நீ! யாரும்மா சமையலறையைக் கட்டிண்டு அழுவா? இப்போ நிறைய மூவீஸ் பார்க்கிறேன். விண்டோ ஷாப்பிங் போறேன்.''

இதெல்லாம் கூட மனசுக்குச் சந்தோஷத்தைத் தருமா என்று நித்யா வியந்தாள்.



"ஏம்மா, நீ நித்துவோட போய் இருக்கப் போறியா?"

நித்யா முந்திக் கொண்டு பதிலளித்தாள்.

"இந்த மாதிரி கேள்வியெல்லாம் கேட்டு அம்மாவைச் சங்கடப்படுத்தாதே துர்க்கா. ராமன் இங்கே தனியா எப்படி இருப்பான்? அவனுக்குச் சாப்பாடு? அதுவுமில்லாம அப்பா கட்டின வீடு இது. இதை விட்டுட்டு எப்படி வருவா? நான் ரெண்டு நாளைக்கு ஒரு தரம் வந்து பார்த்துண்டு போறேன். ஏம்மா...?"

"ஆமாம் துர்க்கா. அவள் என்ன ரொம்ப தூரமாவா போகப் போறா? சரி, நீ என்ன குடிக்கறே? காப்பி கலக்கட்டுமா, இல்லை போர்ன்விட்டாவா?"

"ரெண்டுமே வேண்டாம்மா. ஜூஸ் போதும். பார்வதி சமையலறைப் பக்கம் போனாள்.

"ஆனாலும் உனக்கு ரொம்பத் துணிச்சல் நித்யா."

"எதை வைச்சுண்டு பேசறே துர்க்கா?"

"பின்னே, வீணா எதுக்கு வீடு பார்த்துண்டு போறே? அப்படி என்ன நெருக்கடி இப்போ?"

"இது என்னோட சொந்தப் பிரச்னை துர்க்கா. இதுல எல்லாம் நீ எதுக்குத் தலையிட்டுண்டு அவதிப்படறே? மேலும் நாளைக்கே ராமனுக்குக் கல்யாணமாயிட்டா...?"

"ஆங்! ராமன் கல்யாணம்னு சொன்னதும் நினைவு வர்றது. உன்கிட்டே நான் பேசணும் நித்து."

"ஏன்? ராமனுக்கு ஏதாவது பொண்ணைப் பார்த்து வெச்சிருக்கியா?"

"ஷ்... அம்மா வர்றா. அப்புறமாச் சொல்றேன்."

பார்வதி இரண்டு டம்ளர்களில் பழரசம் கொண்டு வந்து வைத்தாள்.

"நீ சாயங்காலமாத்தானே போவே துர்க்கா?"

"புதுசா புனித யாத்திரை 'டூர் புரோகிராம்' போட்டிருக்கேளாமே! எந்தெந்தக் கோவிலுக்கெல்லாம் வண்டி போவுது...?"

"மதுரைல 'குஷ்பூ கோவில்', ஆந்திராவில் 'மம்தா ஆலயம்', பம்பாயிலே 'பூஜா பேடி மந்திர்' இன்னும்..."

– எஸ். கோவிந்தன்



"ஆமாம்மா."

"அப்பொ நீங்க ரெண்டு பேரும் பேசிண்டிருங்கோ. நான் சித்தக் கண்ணசந்துட்டு வரேன். நீ எப்போ கிளம்பறே நித்து?"

"நாலு மணிக்கு 'டெம்போ' வரும் அம்மா. சாமானையெல்லாம் ஏத்திட்டுக் கிளம்பிடுவேன்."

பார்வதி போன பின் துர்க்கா பேசினாள்.

"நடிகை பூஜ்யாலக்ஷ்மிகிட்டே ஒரு பொண்ணு வேலை செய்யறா. பெயர் ராதா. பார்க்கிறதுக்குப் பூஜ்யாவை விட அழகா இருக்கா. பி.ஏ. எகனாமிக்ஸாம். நம்ம ராமன் அவளைப் பண்ணிக்க ஆசைப்படறான்னு நெனைக்கறேன்."

"அப்படியா?"

"ராதா நல்ல பொண்ணு நித்து. ரொம்ப சிம்பிள். காந்தி கிராமத்துல வேலை பார்த்துண்டிருந்தாளாம். பூஜ்யா அங்கே ஏதோ ஷூட்டிங்குக்குப் போனப்ப இவளைப் பார்த்துத் தன்னோட அழைச்சுண்டு வந்துட்டாளாம். பூஜ்யா கூட கிராஜுவேட்தான்."

நித்யா பேசாமலிருந்தாள்.

"என்ன நித்து, ஒண்ணுமே சொல்ல மாட்டேங்கறே?"

"இதுல பேச என்ன இருக்கு துர்க்கா? அவனுக்குப் பிரியம்னா பண்ணிக்கத்தானே வேணும்! அம்மாகிட்டே அவனே பேசட்டும். அம்மா மறுக்க மாட்டா. நம்ம அம்மாவோட பரந்த மனப்பான்மை யாருக்கும் வராது துர்க்கா."

இரண்டு மணி வாக்கில் பார்வதி எழுந்து காப்பி போட்டாள். நித்யா தோசை வார்த்தாள். மூவருமாகப் பேசிக் கொண்டே டிஃபன் சாப்பிட்டார்கள். துர்க்கா போன பிறகு டெம்போ வந்தது. சாமான்களை ஏற்றிய பிறகு பார்வதியும் நித்யாவும் ஆட்டோவில் டெம்போவைப் பின்தொடர்ந்தார்கள்.

பார்வதி வீட்டைப் பார்த்து மகிழ்ந்தாள்.

"அழகா, சின்னதா இருக்கு நித்யா. ஆபீசு வேற ரொம்பப் பக்கமா இருக்கு இல்லை? உனக்கு ரொம்ப சௌகரியம் நித்து. எதுக்கு ரெண்டு பெட்ரூம் நித்து?"

"ஏம்மா, நாளைக்கே ராமனுக்குக் கல்யாணம்னு வெச்சுக்கோ, நீ நினைச்சப்போ இங்கே வந்திருக்கலாம் இல்லையா? அதுக்குத்தான்."

"நீ சொல்றது நூத்துக்கு நூறு நிஜம்!"

கோதண்டராமன், பிள்ளையார், முருகன், குருவாயூரப்பன், காஞ்சி காமாட்சி இவர்களின் படங்களைச் சாப்பாட்டு அறை

அலமாரியில் வைத்து விட்டு விளக்கேற்றி நமஸ்கரித்தாள்.

பாலைக் காய்ச்சியதும் ஒரு வாய் பருகி விட்டுப் பார்வதி புறப்பட்டாள்.

''ராமன் வந்துடுவான் நித்யா. நான் கிளம்பறேன். முடிஞ்சப்போ வா.. வேலை வேலைன்னு உடம்பைக் கெடுத்துக்காதே. ராத்திரி ரொம்ப நேரம் கண் முழிக் காதே...'' சொல்லும் போதே பார்வதிக்குக் குரல் நெகிழ்ந்து போயிற்று. ஒருகணம் நின்று விழிகளில் துளித்த நீரைச் சுண்டி எறிந்தாள்.

''சரி நித்து - நான் வரேன். உனக்கு மனசுக்குப் பிடிச்சவனா யாராயிருந்தாலும் சொல்லு. ஒத்தையா நிக்காதே. கோவில்ல வைச்சு சிம்பிளா கல்யாணத்தை முடிச் சிடலாம். நீ சந்தோஷமாயிருக் கணும்மா...''

அவளை நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள்.

இருள் பரவத் தொடங்கியது. ஜிட் அவுட்டில் வந்து நின்று கொண்டாள் நித்யா. அருகாமையில் கடல் நீர் கருநீல மாகச் சலசலத்தது. ஓடி வரும் அலை களையும், மெள்ள மெள்ள இருண்டு கொண்டிருக்கும் வானையும், தூரத்தில் பாதி உடைந்த வெள்ளி வளையலாக மின் னிக் கொண்டிருக்கும் நிலவையும் பார்த் தாள். மனம் அமைதியில் லேசாகிப் போனது.

அழைப்பு மணி கிணுகிணுத்தது. ராமனாக இருக்குமோ, என்று எண்ணிய வாறு கதவைத் திறந்தாள்.

பிரசன்னா நின்று கொண்டிருந்தான்.

''இடம் சௌகரியமா இருக்கா நித்யா? ரெண்டு மூணு வருஷத்துக்குக் கவலை யில்லாம நீ இங்கே இருக்கலாம்.''

''நான் உனக்கு ரொம்பவும் கடமைப் பட்டிருக்கேன் பிரசன்னா. உன் ஃபிரெண்டு 'சவுதி' போனப்புறமும் டெலிஃபோனை வெச்சிட்டுப் போனது எனக்கு ரொம்பவும் சௌகரியமாப் போச்சு.''

அவன் உட்கார்ந்தான்.

''ஷாப்பிங் சென்டர் எந்த மட்டுல இருக்கு நித்யா?''

''ஓ! கமிங் அப் ஃபைன்! சுவர் எழுப்பி யாச்சு. 'சென்டரிங்' அடிச்சு கான்கிரீட் போடணும். இது ஒரு சேலஞ்சிங் ஜாப் பிரசன்னா. புல் தரை ஓரமா சின்னதா ஒரு ஸ்நாக் பார் நானே டிஸைன் பண்ணினது. அதுவும் ஜோரா அமைஞ்சுகிட்டிருக்கு... மனசு நிறைஞ்சிருக்கு பிரசன்னா.''

''நீ ரொம்பவும் இளைச்சுட்டே நித்யா''

- அந்தப் பரிவையும் பாசத்தையும் அவள் நெஞ்சினுள் வாங்கிக் கொண்டாள்.

அவனே மீண்டும் பேசினான்.

விசுவத்தைப் பற்றி என்னவெல் லாமோ கேள்விப்பட்டேன் நித்யா. நீ ஜாக்கிரதையா இருக்கணும்.

''......''

''சாரி நித்யா! பயமுறுத்தறேனா?''

அவள் மெலிதாகப் புன்னகை புரித் தாள்.

''இல்லை பிரசன்னா. இந்த மனசு இனிமேல் எத்தனை இடையூறுகள் வந்தா லும் தாங்கிக்கும்.''

''தட்ஸ் குட்! அப்போ நான் புறப்பட றேன். இன்னைக்கு அண்ணாவோட பிறந்த நாள். மன்னிகிட்டே சீக்கிரம் வர்றதாச் சொல்லியிருக்கேன். வரட்டுமா நித்யா?'' என்றவன் பரிசுக் காகிதத்தில் ஒரு நீண்ட சுருளை அவளிடம் நீட்டினான். ''உன் னோட பார்வையில இது எப்போதும் படறாப்போலே வைச்சுக்கோ.''

அவன் போய் விட்டான். மனம் திடீ ரென்று அவனுடனேயே போய் விட்டது போல் தோன்றியது.

காகிதச் சுருளைப் பிரித்தாள்.

ஒரு அழகான போஸ்டர்.

பரந்த, நீலவானில் இறக்கைகளை விரித்துக் கொண்டு இரண்டு பறவைகள்.

கீழே... "They can; because, they think they can" என்ற வாசகம்.

(தொடரும்)

# ராஜ்யம் இல்லாத ராஜா...

**பா**த்ரூமில் யாரோ குளிக்கிற சப்தம் கேட்டது. கிருஷ்ணகுமார் மறுபடி மணி பார்த்தான். ஆறு முப்பத்தைந்து. இது அவனின் சமயம். வழக்கமாய்க் கேட்கிற பாத்திர உருளல்களின் சப்தம் இல்லை. ஒற்றையாய் ஒரு காகம் கரைந்தது. அம்மாவா?

ஜன்னல் திறக்க, மோத வந்தது காற்று. இன்னும் ஒரே மணிக்குள் உஷ்ணமாகிப் போகும். இந்தக் குளிர்ச்சி மாயமாய் மறையும். புன்னகைக்கிற முகம் சுருங்குவது போல் எல்லோரையும் பொசுக்க விரையும்.

கதவு திறக்கப்பட்டு, ஈரஞ் சொட்ட அம்மா தோளில் வழிகிற துணிகளோடு வெளிப்பட்டாள். ''லேட்டா யிடுச்சா உனக்கு?'' என்றபடி காய வைக்கிற கொடி தேடிப் போனாள்.

ப்ரஷ் எடுத்துப் போகிற வழியில், அறைக்குள் தலை நுழைத்துப் பார்த்தான். மூர்த்தி இன்னும் நல்ல உறக்கத்தில், கால்களைப் பரப்பி எழுந்திருக்கிற உத்தேசமின்றி மல்லாந்திருந்தான்.

தண்ணீரை அள்ளித் தலைநனைக்கையில் கவிதாவின் ஞாபகம் வந்தது. 'எப்போ சிரிக்கப் போறியோ நீயெல்லாம்... இதுக்காக ஸ்பெஷல் கிளாஸா நடத்த முடியும்?'

'உனக்குத் தெரியாது கவிதா... என்னோட கமை.... அது எப்பவும் பாறையா என்னை அழுத்திட்டிருக்கப்போ எப்படி போலியா சிரிக்க முடியும்....?'

தலை துவட்டி வர, காப்பியும் உப்புமாவும் தயாராய் இருந்தன.

''இன்னிக்குக் கொஞ்சம் சீக்கிரமே வந்துடேன் குமார்....''

''எதுக்கும்மா....?''

''பதினோரு மணிக்கு நான் கிளம்பணும்.... நாளைக்குத்தான் திரும்ப முடியும்னு நினைக்கிறேன்....''

''அப்படி எங்கம்மா போறே....?''

''திவ்யாவோட மூத்த பையன் கல்யாணம்... மூணு தடவை கூப்பிட்டுட்டா போகாம இருக்க முடியுமா? இருநீர் மலையிலே கல்யாணம் - அதிகாலை யிலே... இன்னைக்கே போய் அங்க பொண்ணு வீட்டுக்காரங்க ஏற்பாடு செஞ்சிருக்கிற மண்டபத்திலே தங்கியிருந்துட்டு, காலையில முகூர்த்தத்துக்குப் போகச் சரியா யிருக்கும்...'' - இதுபோல காரியங்கள் என்றால் அவளின் உற்சாகத்துக்கு அளவே இருக்காது.

கடித்த மிளகாய் காரமாய்த் தொண்டையில் இறங்கியது.

''நான் புளியோதரை பண்ணி வெச்சுட்டுப் போயிடுறேன்... இந்த மூர்த்திப் பய எத்தினி மணிக்கு எழுறானோ தெரியலே... இப்பவே ஒரு வாய் சாப்பிட்டுட்டான்னா சாயங்காலம் நீ வர்றவரைக்கும் பேசாம இருப்பான்.... இல்லேன்னா இங்கே ரகளை பண்ணி வெச்சுடுவான்.... அதட்டறதுக்கு நானும் இருக்கமாட்டேன்.... நீ சீக்கிரமே பர்மிஷன் போட்டுட்டு வந்துடேன் குமார்....'' மறுபடியும் அம்மா சொன்னபோது வெறுமனே தலையசைத்தான். நீ போகாவிட்டால் கல்யாணம் நின்று போகாதம்மா என்று சொல்லத் தோன்றியதைச் சொல்லாமலேயே படியிறங்கினான். உள்ளே மூர்த்தியை எழுப்ப அம்மா பலமாய் அதட்டுவது காதில் விழுந்தது.

**ப**ஸ்ஸில் ஏறி, மூச்சுக் காற்றுக்காகத் திணறுகிற போதெல்லாம் கவிதா சொல்வது நினைவிலாடும். 'எதுக்காக இத்தனை சிரமப் படணும்? சம்பாதிக்கிறே இல்லே....? உடனடியாப் புரட்ட முடியாது அத்தனை பைசான்னு வெச்சுக்குவோம்... லோன் அப்ளை பண்ண வேண்டியதுதானே..? பொம்பளை நானே மொபட் ஓட்டிட்டு ஹாய்யா வர்றேன்... நீ என்னடான்னா... இங்க பாரு சட்டையெல்லாம் கசங்கிப் போய்....?' - காலில் யாரோ அழுத்தமாய் மிதித்தார்கள். விருட்டென்று இழுக்கக் கூட முடியாமல் வேதனையில், மனம் ரணமாய்க் கனன்றது.

> 'எல்லாருக்குள்ளேயும் துக்கங்கள் இருக்குன்னு நீ நினைக்கணும்... நமக்கு மட்டும்தான் இப்படின்னு நினைச்சா போச்சு... அந்த கழிவிரக்கமே நம்மைக் கொல்லும் புரிஞ்சுதா....?'

**அ**லுவலகத்தில் எதிர்ப்படுகிறவர்கள் எல்லாம் பூரிப்பிலிருந்தது போல் தோன்றியது கிருஷ்ணகுமாருக்கு. என்ன விசேஷமாயிருக்கும் என்பது பிடிபடவில்லை. அவன் வீட்டுக்குப் போய்

அமர்ந்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கவிதா வந்தாள்.

''இன்னிக்காவது சிரி மனுஷா... மூணு மாச போனஸ் அனவுன்ஸ் பண்ணியிருக்காங்க மேனேஜ்மெண்ட்ல... ஸர்ப்ரைஸ் இல்லே...? எனக்கு நீ டிபன் வாங்கித் தரணும் சன்னாவிலே ஒக்கே....?''

''வீட்ல ரொம்ப நாளா அம்மா ஒரு கிரைண்டர் வேணும்னு சொல்லிட்டிருக்கா....''






- தஞ்சைத் தரணியன்

பாரம் சொன்னான். 'படிச்சு முடிக்கப் போறான் எங்கண்ணன்... ஃபைனல் இயர் பாஸ் பண்ணிட்டான்னா நமக்கு விடிவுகாலந்தான்னு நெனைச்சிட்டிருக்கிற சமயத்தில் திடீர்னு இப்படி ஆகிப் போனா யாரோட மனசுதான் அதைத் தாங்கிக்கும்... பார்க்கிற வைத்தியருங்க எல்லாம் சொல்றது அதுதான் - அவருக்கு டிஸ் ஆர்டர் எதுவு மில்லே.... பிரமையில சிக்கிட்டிருக்கார்... கொஞ்ச நாளைக்கப்புறம் நார்மலாயிடு வாருன்னு.... ஆச்சு அஞ்சு வருஷம். இன்னும் அப்படியேதானிருக்கான் மூர்த்தி... அரை குறையா நின்னு போன என் படிப்பை வெச்சுக்கிட்டுக் கிடைச்ச வேலையில காலந் தள்ளிட்டிருக்கோம்... எனக்குன்னு சொந்தமா எதைச் செய்ய நினைச்சாலும் வீட்ல சந்தோஷமிருக்கிறதே இல்லாம வளைய வந்திட்டிருக்கிற அம்மாவும், சந்தோஷம்னா என்னங்கிறதையே உணர முடியாத அண்ணனும்தான் கண் முன்னால வந்து நிக்கிறாங்க.... என்னால அவங்களை ஒதுக்கிட்டு எதையுமே நினைச்சுப் பார்க்க முடியலே கவிதா.....'

சேர்த்துக் கட்டிய முழங்கால்களில் முகம் பதித்துக் கேட்டுக் கொண்டிருந்தாள் கவிதா.

'ஸாரி... நீ ரொம்பவும் சிவியரா ஃபீல் பண்றே கிருஷ்ணா... வேற ஏதாவது பேசலாம்.... எல்லாருக்குள்ளேயும் துக்கங்கள் இருக்குன்னு நீ நினைக்கணும்... நமக்கு மட்டும்தான் இப்படின்னு நினைச்சா போச்சு... அந்த கழிவிரக்கமே நம்மைக் கொல்லும் புரிஞ்சுதா....?'

வெகு நேரத்துக்கு இருவரும் எதையுமே பேசவில்லை. புறப்பட மணல் தட்டி எழுகையில் கவிதா சொன்னாள், 'உங்க வீட்டுக்கு ஒரு நாளைக்கு வரணும் நான்.... அழைச்சிட்டுப் போவியா?'

'எதுக்கு கவிதா....?' - கொஞ்சம் ஆடிப்போனது நிஜம்.

'சும்மாதான்... அட நீ ஏன் வேர்த்து வழியறே... நீ கூட்டிட்டுப் போகாத வரைக்கும் நானா அங்க வந்து இறங்கமாட்டேன் போதுமா... சாமி....?'

அந்நேரத்துக்கு நெருடலாய்ச் சிரித்து வைக்க வேண்டியிருந்தது.

ஆபீஸ் முடிந்து பஸ்ஸுக்குக் காத்து நிற்கையில் மொபெட்டில் வந்து காலூன்றி ஏறிட்டாள் கவிதா. ''ரொம்ப அவசரமா....?''

''அது அப்புறம்... முதல்லே உனக்கு ஒரு வண்டி வாங்கிக்க கிருஷ்ணா....''

''அதெப்படி வீட்ல அவங்களோட தேவைன்னு வர்றப்போ என்னுடைய சுயநலம் முக்கியமா? நான் இல்லேன்னா அவங்க வேறு யாரு கிட்டே போய்க் கேட்க முடியும்...?''

''உங்கிட்டே எதையும் சொல்லலே நான்... உன்னோட இஷ்டம் போல செய்....'' விருட்டென்று திரும்பிப் போனாள் கவிதா.

எதற்காகத் தன்னைக் குறித்து அவளுக்கு இத்தனை ஈடுபாடு என்பது கிருஷ்ணகுமாருக்குத் தெரியவில்லை. அவள் அவனை ஜூனியர் என்று எப்போதும் கருதியதில்லை. அவளாய் வலிய வந்து பேசுகையில் முகம் திருப்பிப் போக கிருஷ்ணகுமார் நினைத்ததில்லை. எத்தனையோ பேர் அலுவலகத்தில் வேலை செய்ய, கவிதா தன்னிடம் மட்டும் ஏன் உரிமை எடுத்துக் கொள்கிறாள் என்பது விளங்கவில்லை.

மதியச் சாப்பாட்டுக்கு டைனிங் ரூம் போனபோதும் கவிதா கண்ணில்படவில்லை. அம்மா இந்நேரம் கல்யாண கோஷ்டியோடு பாதி வழியில் இருப்பாள். மூர்த்தி என்ன பண்ணிக் கொண்டிருக்கிறானோ? அதென்னவோ கைக்குழந்தையைத் தனியே விட்டு வந்த பெண்ணைப் போல மனம் எப்போதும் வீட்டையே சுற்றிக் கொண்டிருப்பதுதான் தன் பலவீனமோ?

வெளிப்படையாய்ப் பேசுவதற்குக் கூட நல்ல நட்பென்று எதுவுமில்லை. ஒரு சமயம் கவிதா வற்புறுத்திக் கிளற, கொஞ்சமாய்த் தன்

காலையில் பிணங்கிப் போன கவடில்லை. இப்போது புதிதாய்த் தருவித்த முறுவலில் முகம்.

''ஆமா கவிதா... மூர்த்தி மட்டும் தனியேயிருப்பான்... மூணு மணிக்கே போயிருக்கணும் நான்... வேலை இருந்ததினாலே முடியலே.... அம்மா வேறு வெளியூர் போயிருக்கா....''

''ஆஹா... அருமையான சான்ஸ் என்னையும கூட்டிட்டுப் போயேன் உன் கூட....'' சின்னக் குழந்தை போல குதூகலித்தாள்.

எல்லோரும் கெட்டபார்வை பார்ப்பது அறிந்து அவனுக்குக் கூசியது.

''ஐயோ... நீ இளம்பு கவிதா இன்னொரு நாள் போகலாம்....''

''இந்தச் சாக்கெல்லாம் வேணாம்... நீ அட்ரஸ் சொல்லிட்டு வண்டியேறிப் போ... நான் உனக்கு முன்னால அங்க வந்து நிக்கறேன்....'' விடாப்பிடியாய் நின்றவளைத் துரத்த அட்ரஸ் சொன்னான். வந்து நின்ற பஸ்ஸில் அவசரமாய்த் தொற்றிக் கொண்டான். உள்ளபடியே வருவாளா?

**வீ**ட்டு வாசலில் வண்டி நின்றிருந்தது. கவிதா எங்கே...? பதற்றமாய் உள்ளே நுழைகையில் காப்பியோடு அவள் சமையலறையிலிருந்து வருவது கண்டு திகைப்பாயிருந்தது. உங்கண்ணனுக்கு... பயங்கரப் பசியாம்... வயித்தையே தடவிட்டிருக்கார்....'' அவள் சொல்லவும் பயம் வந்தது.

''அவன் கூடப் பேசினியா நீ.... புதுசா யாராவது எதுனா சொன்னா முரட்டுத் தனமாப் பாய்வானே....? உனக்கு எதுக்கு கவிதா இந்த வீணான வேலையெல்லாம்....''

''ஜஸ்ட் ஒருநாள் தானே... அதுவும் இங்க வந்ததினால இதைப் பண்ணிட்டேன்...''சாதாரணமாய்ச் சொன்னாள்.

அவனிடமிருந்து தம்ளரை வாங்கிக் கொண்டு போய் மூர்த்தியிடம் தந்தான். ''ஒரு நிமிஷம் வெளியே இரு கவிதா'' என்றுவிட்டு அவிழ்ந்திருந்த வேஷ்டியைக் கட்டி விட்டான். போட்டிருந்த சட்டை மாற்றி வேறு ஒன்றை அணிவித்தான். தலையை லேசாய் எண்ணெய் புரட்டி வாரினான். ஜன்னலைத் திறந்து வைத்து, ஊதுபத்தி ஏற்றி, கதவிடுக்கில் செருகினான். பெட்ஷீட் உதறி விரித்துத் தலையணைகளைச் சரி பண்ணி விட்டு வெளியில் வந்து ''ஸாரி கவிதா.... வீட்டுக்கு வந்த உன்னை உட்கார வெச்சு ஒரு காப்பி தரக்கூட எனக்கு முடியலே... ரெண்டு நிமிஷம் பொறுத்துக்க வந்திடுறேன்...'' கவிதா எதிர்பார்ப்போடு காத்திருந்தாள் அவன் வருகிறவரை.

மடித்துக் கட்டிய கைலியை அவிழ்த்து விட்டுக் கொண்டபடி காப்பி தம்ளரோடு அவளருகில் அமர்ந்து கொண்டவனையே இமைக்காது பார்த்தாள். ''தினமும் இப்படித்தானா கிருஷ்ணா...?''

''ஆமா... கவிதா... அம்மா செய்யலாம்தான்... ஆனா என்னவோ அவ பண்ணுறதில்லே... தலைக்கு மேல வளர்ந்த ஆம்பிளைப் புள்ளைய எப்படித் தொட்டுத் தூக்கி இதெல்லாம் செய்ய முடியும்னு நினைப்பான்னு தோணுது.... அதுகூடச் சரிதான்... நீயே சொல்லு கவிதா எல்லோருக்குள்ளேயும் ஒரு தேடல் இருக்கு... ஒரு குறிப்பிட்ட காலம் வரைக்கும் வேணா இப்படியிருக்கணும் போல, அதுக்கப்புறம் எப்படியும் வசந்தம் வரும்... அதுக்காகக் கஷ்டப்படணும்கிற உத்வேகம் இருக்கும்... ஆனா விவரந் தெரிஞ்ச நாளிலேர்ந்து கஷ்டத்தையே பார்த்து வந்திருக்கிற அம்மா கிட்டே இனிமே கனவாய் எதுவும் இருக்கும்னு நான் நினைக்கலே.... கல்யாணம், சடங்குன்னு அடிக்கடி அம்மா போறான்னா எதையோ தேடிப் போற ஏக்கம்... எனக்கு இஷ்டமில்லேதான்... ஆனா அவளோட மகிழ்ச்சியாத் தெரியற ஒரு விஷயத்துல குறுக்கிட எனக்கு மனசில்லே கவிதா.... பெத்த வகைக்கு அவ எத்தனையோ பண்ணியிருக்கா எனக்கும், அண்ணனுக்கும்... அதைப் பெரிசா எடுத்துக்கணும்... மூர்த்திக்கு நான் இருக்கிற வரைக்கும் பிரச்னையே இல்லேன்னு அம்மாவுக்குத் தெரியும்...''

''அதுக்காக வாழ்நாள் பூராவும் இப்படியே ஓட்டிட முடியுமா?''

''கொஞ்ச நாள்ல மூர்த்தி சரியாயிடுவான்... அதுக்கப்புறம் அவன் வேலைக்குப் போயி அம்மாவ ராணி மாதிரி வெச்சுக்குவான்....''

''அதுக்கப்புறம்தான் உனக்கு ஒரு துணை, வாழ்க்கை இதெல்லாம்ங்கிறியா?'' கவிதாவின் குரலில் ஏமாற்றமிருந்தது.

''பின்னே...? அதுக்கப்புறம் நான் ஏகபோகச் சக்கரவர்த்தி இல்லையா கவிதா?'' சிரிக்கும் போதே கண்ணீரும் அனிச்சையாய் வந்தது.

> ***திண்டிவனத்தின் முன்னாள் பெயர் திந்திருணிவனம் என்பதாகும். திந்திருணி என்பது புளிய மரத்தைக் குறிக்கும் சொல்லாகும்.***
>
> ***- பா. குணா***

11

# மாயக்

எஸ்.பி. சண்முகம் டாக்டரிடம், ''டாக்டர்! குதிரை மூலமா ரேபீஸ் வர சான்ஸ் உண்டா?'' என்றார்.

''ஓ யெஸ். தனியா ஹார்ஸ் வீரம் கூட இருக்கு.''

''பட், குதிரை மனுஷங்களைக் கடிக்குமா?''

டாக்டர் சிரித்தார். ''பொதுவாக் கடிக்கிறதில்லை. ஆனா ரேபீஸ் வந்த நாய் அதைக் கடிச்சு அதுக்கு நோய் தீவிரமான நேரத்துல அதுக்கு வெறி வந்திடும். அப்ப கடிக்க சான்ஸ் இருக்கு....'' என்றார்.

''தாங்க்யூ டாக்டர்!''

எஸ்.பி. சண்முகத்திற்குச் சந்தேகங்கள் பிடிக்காது. எப்படிப்பட்ட சந்தேகம் இருந்தாலும் அதை உடனே தீர்த்துக் கொண்டு விட வேண்டும். அவர் உடனே பி.ஏ. கந்தரத்தைச் சந்தித்து, குதிரை விஷயத்தைத் தீவிரமாக விசாரித்தார். துரையின் விலாசத்தை வாங்கிக் கொண்டார்.

ஜாபர்கான்பேட்டை பாலத்திற்கு அருகே ஹவுஸிங் போர்ட் வீடுகளைத் தாண்டி காளியம்மன் கோவில் தெரு மூன்றாம் நம்பர் வீட்டின் வாசலில் போலீஸ் ஜீப் புழுதியைக் கிளப்பியபடி நின்றது. மக்கள் ஆர்வமாக நின்று பார்த்தார்கள்.

சண்முகம் கர்சீஃபினால் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டார். மூன்றாம் நம்பர் வீட்டைப் பார்த்தார். பூட்டியிருந்தது. ஜீப்பிலிருந்து இறங்கி, எதிரேயிருந்த இளைஞனிடம், ''வீட்டில் யாரும் இல்லையா?'' என்றார்.

''இல்லீங்க. காலி வீடு'' என்றான் அவன்.

''காலியா? துரைன்னு ஒருத்தரு இல்லை?''

மற்றொருவன் ஆர்வமாக வந்து, ''ஆமாங்க. குதிரைக்காரரு. அவருதானே?'' என்றான்.

''ஆமாம். இருக்காரா?''

''இருந்தாரு. ஆனா காலி பண்ணிப் போய் நாள் ஆவுதே...''

''இப்ப எங்கே இருக்காரு?''

''சொந்த ஊருக்குப் போய்ட்டாப்ல.''

''எந்த ஊரு?''

''அதிராம்பட்டினம்.''

''விலாசம் இருக்கா?''

''தெரியலீங்களே. ஏய், பாபு! உன் கிட்டே இருக்குதா?''

அந்த பாபு எனப்பட்டவன், ''குடுக்கலீங்க. திடீர்னு லாட்டரியில காசு அடிச்சதுன்னு நினைக்கிறேன். திடுப்னு காலி பண்ணிட்டாரு. ஒண்டியாளு'' என்றான்.

''எப்படித் தெரியும் லாட்டரி அடிச்சதுன்னு?''

''அவருதாங்க சொன்னாரு. இனிமே எல்லாத்தையும் விட்டுட்டு வியாபாரம் செய்யப் போறேன்னாரு.''

''அவருகிட்டே ஒரு கறுப்பு குதிரை இருந்ததா?''

''ஆமாங்க. குதிரைங்க மாறிக்கிட்டே இருக்கும். வாடகைக்கு எடுத்தாருவாரு. கிண்டியில கொஞ்ச நாளு வேலை செஞ்சாரு...''

''அந்தக் கறுப்புக் குதிரை செத்துப் போச்சா?''

அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு உதட்டைப் பிதுக்கினார்கள்.

''சரி. அதிராம்பட்டினம் விலாசம் இருந்தா கொடுங்க'' என்றார்.

''இல்லீங்களே! இருந்தா தந்துருவோமே.''

''எவ்வளவு அடிச்சதாம் லாட்டரியில?''

''தெரியல்லீங்க. ஆனா நிறைய பணம்!''

''அவரு ஃபோட்டோ யார்கிட்டேயாவது இருக்குதா?''

''இல்லைங்க.''

''அவர் நண்பர்கள் யாரையாவது தெரியுமா?''

''சினிமா ஸ்டூடியோல நிறைய ஃப்ரெண்ட்ஸுங்க - பெரி பெரி ஆளுங்கள்லாம் தோஸ்துன்னுவாரு அடிக்கடி!''

''வூட்ல கூட மதன்ராஜ் பக்கத்துல நின்னுகினு போட்டோ வைச்சிருந்தாரு'' என்றான் ஒரு பரட்டை.

''சரி. அவரைப் பத்தி விவரம் தெரிஞ்சுதுன்னா உடனே பக்கத்து போலீஸ் ஸ்டேஷன்ல வந்து சொல்லுங்க.''

''ஆகட்டுங்க.''

''விலாசம் யாராவது சொன்னாங்கன்னாலும் உடனே சொல்லுங்க.''

''சரிங்க.''

ஜீப்பில் ஏறுவதற்கு முன் ஒரே ஒரு வினாடி யோசித்து, பிறகு மறுபடி திரும்பி, ''யார் இந்த

கிருஷ்ணா டாவின்சி

வீட்டுக்குச் சொந்தக்காரரு?'' என்றார்.

ஒரு வயதானவர் ''நான்தான் ஸார்'' என்றார் பயத்துடன்.

சண்முகம் அவரைப் பார்த்து, ''பூட்டைத் திறங்க'' என்றார்.

**து**ரை இருந்த வீடு கவனிப்பில்லாது, புழுதி நிறைந்து 'ஹோ'வென்றிருந்தது. அலமாரியெல்லாம் காலியாகக் கிடந்தது. இலக்கின்றி பரண்மேலெல்லாம் பார்த்தார். பாத்ரூம் கதவைத் திறந்து பார்த்தார். மூடியிருந்த அலமாரிக் கதவைத் திறந்து பார்த்தார். பழைய தினசரிகள் சில கிடந்தன. சில பிரவுன் காகிதங்கள். நோட்டீஸ்கள். ஒரு பில் கிடந்தது. எடுத்துப் பார்த்தார். ஒரு மாதத்திற்கு முந்தைய தேதியிட்டு, புரியாத மருந்து பெயர் கிறுக்கி, ரூபாய் இருநூற்றி ஐம்பது என்று குறிக்கப்பட்டிருந்தது. பில்லின் மேற்புறம் 'ராஜ் வெட்ரினரி ஹாஸ்பிடல்' என்று அச்சடிக்கப்பட்டிருந்தது. அதன் விலாசம் கே.கே. நகரில் இருந்தது.

''வீட்டைப் பூட்டிக்குங்க. துரை வந்தா உடனே இன்ஃபார்ம் செய்யுங்க'' என்றார்.

''சரிங்க. நிச்சயமா.''

ஜீப் மறுபடி கிளம்பியது. நேராக அந்த மருத்துவமனையில் போய் நின்றது. சில நிமிடங்களில் சண்முகம் டாக்டர் ராஜ்மோகனைச் சந்தித்தார். அந்த பில்லைக் காட்டினார்.

டாக்டர் அதைப் படித்துப் பார்த்து, ''ஃப்ளூரி ஸ்ட்ரெய்ன். வாக்ஸின்'' என்றார்.

''உங்க ஆஸ்பத்திரி பில்தானே?''

''ஆமாம்.''

''என்ன மருந்து இது?''

''தடுப்பு ஊசி சார். ப்ளீஸ், ஒரு நிமிஷம்,'' என்றவர் வேறு ஒரு டாக்டரை வரவழைத்து அந்த பில்லைக் காட்டினார். அவர் அதைப் படித்துப் பார்த்து, ''ஹார்ஸ் வாக்ஸின் டாக்டர்! நம்ப பில்தான்...'' என்றார்.

''ஹார்ஸா? அப்படின்னா டாக்டர் ராமபத்ரன்! இன்ஸ்பெக்டர், அவரைக் கூப்பிடட்டுமா?''

''ஐ'ஆம் எஸ்.பி.'' என்றார் சண்முகம். ''கூப்பிடுங்க அவரை.''

டாக்டர் ராமபத்ரன் கண்ணாடியைச் சரி செய்தபடி சண்முகத்தை விநோதமாகப் பார்த்து ''என்ன விஷயம்?'' என்றார்.

''டாக்டர்! போன மாசம் ஏதாவது குதிரைக்கு ட்ரீட்மெண்ட் கொடுத்தீங்களா?''

''நிறைய குதிரைக்குக் கொடுத்தேன்.''

''எ பிளாக் ஹார்ஸ்?''

''மே பி. என்ன விஷயம்?''

''ஏதாவது குதிரை செத்துப் போச்சா?''

டாக்டர் ராமபத்ரன் யோசித்தார்.

''ரேபீஸ்னால?''

அவர் சட்டென்று ஞாபகம் வந்து, ''ஆமாம். ஒரு குதிரை. கறுப்புக் குதிரை...'' என்றார்.

சண்முகம் பிரகாசமாக, ''அதைக் கூட்டி வந்தது யாரு? அவன் பேரு துரையா?'' என்றார்.

''மறந்து போச்சு ஸார். அப்படித்தான் நினைக்கிறேன். பெரிசா மீசை வைச்சிருந்தான்.''

''அந்தக் குதிரைக்கு என்ன ஆச்சு?''

''ரேபீஸ். முத்தின ஸ்டேஜ்ல எடுத்து வந்தான். செத்துப் போச்சு.''

''அந்தக் குதிரையை என்ன செஞ்சீங்க?''

டாக்டர் ராஜ்மோகன் வாய் திறந்து, ''காசு கொடுத்து வாங்கிட்டோம். அடாப்ஸி டெஸ்ட்டுக்கு ரிஸர்ச் இன்ஸ்டிடியூட்டுக்கு அனுப்பிச்சிட்டோம். யூஷுவலா அதைத்தான் செய்வோம்'' என்றார்.

''எந்த இன்ஸ்டிடியூட்?''



- எங்கேனும்
காலியாகுமா என்று
காத்திருக்காதே!
நீயே,
புதியதோர் இடத்தை
உனக்கென உருவாக்கு!

- நிரப்பப்பட்ட இடங்களைவிட
உருவாக்கப்பட்ட இடங்களே
உன்னதமானவை!

\- பாரதி சந்திரன்

''அடையாறுல. க்வீன் விக்டோரியா.''

''அனுப்சதுக்கு ரிகார்ட் வைச்சிருக்கீங்களா?''

''ஓ யெஸ். கேஸ் ஹிஸ்டரியே இருக்கும்.''

''அதைக் கொடுங்க.''

''எதுக்கு ஸார்?''

''ஒரு கேஸ் விஷயமா வேணும். எல்லா பார்டிகுலர்ஸ்ஸும் கொடுங்க. நாங்க பார்த்துக்கறோம்.''

''ஷ்யூர். ஒரு பத்து நிமிஷம் வெய்ட் பண்ண முடியுமா? கூல்டிரிங்ஸ் சாப்பிடறீங்களா? ஏய்! வேலு!''

**க்**வீன் விக்டோரியா ரிஸர்ச் இன்ஸ்டிடியூட்டில் டாக்டர் ஷீலாராணி என்பவர் கவனமாகக் கேட்டு, ''வாங்க! நீங்களே பாருங்க!'' என்றார். இளம்பெண் அஸிஸ்டெண்ட் கூட வர, குளிர்ப்பதனம் செய்யப்பட்ட அறைக்குள் அழைத்துச் சென்றாள். வெள்ளையாகக் கோட் அணிந்த டாக்டர்களும், வெள்ளை முயல், எலிகளும், குரங்குகளும் தென்பட்டன(ர்). வேறொரு அறைக்குள் நுழைந்து, வரிசையாக நம்பர் தேடி, ஒரு கண்ணாடி ஜாரைக் காட்டி, ''இதோ, உங்கள் பிளாக்கி'' என்றார்.

அந்தக் கண்ணாடிக் குடுவையில் ஸ்பிரிட் போன்ற திரவத்தில் ஏதோ ஒழுங்கற்ற சதைக் கோளம் மூழ்கியிருந்தது.

''டாக்டர்! இது என்ன?''

''அந்தக் குதிரையோட மூளை. ஃபார்மாலின்ல போட்டு வைச்சிருக்கோம்.''

''இந்த அடாப்ஸி ரிபோர்ட் இருக்கா?''

''வாங்க.''

வேறு அறைக்குப் போனார்கள்.

டாக்டர் கொடுத்த ரிபோர்ட்டைப் படித்தார். "The skull of the horse was split and immersed in formalin liquid. The brain was searched for negri bodies. Inclusions were found in the Cytoplasm of nerve cells. Negri bodies found were ranging in size from 0.25 to 25 u. The type of virus is furious in nature. The recovery of virus from saliva showed...

''டாக்டர்! இந்தக் குதிரை ரேபீஸ்னால தான் செத்துப் போச்சா?'' என்றார் பாமரத்தனமாக.

''ஆமாம்.''

''குதிரைக்கு எப்படி ரேபீஸ் வந்திருக்கும்?''

''சுவி! நாய் கடிச்சிருக்கும்...''

''வேற ஏதாவது குறிப்பிடும்படியா?''

''நத்திங்.''

''இப்படி ஆராய்ச்சி பண்றதுனால என்ன லாபம்?''

''வி எக்ஸ்ட்ராக்ட் ஸீரம். அதுவும் ஹார்ஸ் ஸீரம் கிடைக்கிறது ரொம்ப அபூர்வம்.''

''தாங்க் யு டாக்டர்!'' சண்முகம் எழுந்து நின்று வணக்கம் சொல்லி விடைபெற்றார்.

''**கு**ட் வொர்க்'' என்றார் கமிஷனர். ''ஸோ, சூர்யா செத்துப் போனது ரேபீஸ்னால, அதுவும் அந்தக் குதிரை மூலமாத்தான்னு நிரூபணம் பண்ணிட்டீங்க... வி கன் க்ளோஸ் தி ஃபைல்...''

''இல்லை ஸார்! சில விஷயங்கள் நெருடுது. சின்ன சின்ன சந்தேகங்கள்தான்'' என்றார் சண்முகம்.

கமிஷனர் ஆச்சர்யமாக ''என்ன உங்க சந்தேகம்?'' என்றார்.

''அந்த துரை எங்கே போனான்? அந்தக் குதிரைக்கு எப்படி ரேபீஸ் வந்தது? அது சூர்யாவுக்கு எப்படி பரவிச்சு? இது தெரிஞ்சாப் போதும்'' என்றார் எஸ்.பி. சண்முகம்.

(தொடரும்)

- யானை வருது!

\- குறுநாவல்

- விபத்தில்
அடிபட்டவருக்கு
உபத்திரவமின்றி
உதவலாமே!

- ஏனிந்த வெளிநாட்டு
மோகம்...?

\- இளைஞர்களுக்கு



# பொன் விலங்கு



பிறிதொரு அண்ணன் -
தங்கை பாசக் கதை. ரவுடி அண்
ணன். தங்கைக்குப் போலீஸ் காத
லன். செண்ட்டிமெண்ட்டுக்குக் கேட்
பானேன்?
இயக்குனர் செல்வமணி, தயா
ரிப்பு, கதையோடு ஒதுங்கிக்
கொண்டு தமது நண்பருக்கு (கே.
எஸ். ராஜ்குமார்) வழி விட்டிருக்
கிறார்.
சிவரஞ்சனி சைக்கிள் கற்றுக்
கொள்ளும் மகோத்ஸவத்தில்
தொடங்கி, பொள்ளாச்சிப் பச்சை
யில் புகுந்து எழும் காமெராவுக்கு
முதல் ஜே!
ஒரு போலீஸ்காரனுக்குத் தன்
தங்கையைக் கொடுக்க மாட்டேன்
என்று அண்ணன்காரன் சொல்கி
றார். காரணமாக, பிளாஷ்பேக்கில்
பத்மினி வழக்கைப் போல் ஒரு
கதை. அந்த பிரும்மாண்ட உடம்புக்
காரர் என்னமாய்ச் சண்டை போடு
கிறார்? கொஞ்சமாவது நடிக்கவும்
செய்திருக்கலாம்.
ஆஹா, ரம்யா கிருஷ்ணன்
இவருக்குள் இத்தனை திறமையா?
வட்டி வசூல் செய்யும் லாவகம்
என்ன, கனவு காணும் நளின
மென்ன, கிளைமாக்ஸின் ரௌத்தி
மென்ன... இன்னொரு ரவுண்ட்
வரப் போகிறார், பராக்!
சிவரஞ்சனிக்கு அதிக வேலை
இல்லை. போலீஸ்கார ரகு(மான்)
வைக் காதலித்து விட்ட பாவத்தி
குப் படம் முழுக்க அழுகிறார்.
வானகர்த்தா பேனாவில் இங்
தான் போட்டாரோ அல்லது சா
கடை நீரையோ! மகா அருவருப்பு
பாட்டு ஒன்றும் சுகமில்லை
இளையராஜாவுக்கு வேறு யாரோ
'ப்ராக்ஸி' கொடுத்திருக்கிறா
களோ என்று நினைக்க வைக்கிறது
பழைய சாத பகளாபாத்.

- ஆர்.பி.ஆர்

---

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1993

கதைகளை அனுப்ப வேண்டிய
கடைசித் தேதி : ஜூன் 15. விவரங்களுக்குச்
சென்ற வார கல்கி இதழைப் பாருங்கள்.

- ஆசிரியர்



மே மாத இதழ்
சிறுகதை கதிர்
ராஜேஷ்குமார் எழுதும்

# சூப்பர் ஸ்டார் என்றால் ரஜினி; ரஜினி என்றால் சூப்பர் ஸ்டார்!

1. கவனிக்கவில்லையா?
2. எங்கும் இதர தொகுதிகள்
3. புகைப்படம் எங்கே?
4. சபாஷ் சரத்!
5. தன்னடக்கம் தெரிந்தது
6. பிடியுங்கள் பாராட்டு
7. வசீகரித்தான்
8. டானிக்!
9. தலையங்கத் தராசு!
10. தாய்மையுடன் ஒத்தடம்
11. ஒரே வழிதான் உண்டு!
12. இப்படியா கேட்பது?

1. கல்கி 4.4.93 இதழில் வெளியான 'சுமார்' சிறுகதையின் கருத்தும், 18.4.93 இதழில் வெளியாகியுள்ள 'எல்லைகள்' சிறுகதையின் கருத்தும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றன. கவனிக்கவில்லையா...?!

பாண்டிச்சேரி, தா. செல்வராசன்.

2. தொகுதி மக்களுக்கு நலமளிக்கும் நல்ல பல திட்டங்கள் ஏற்படுத்தியிருப்பது நல்லதுதான். அவை செயல்வடிவம் பெற்றிருப்பது மிகவும் பாராட்டுக்குரியதுதான். ஆனால் எந்த ஒரு அடிப்படை வசதியும் இல்லாத நான்காம் தர பகுதிகளுடைய தொகுதிகளும் நம் நாட்டில் இருக்கின்றன. அவற்றுக்கும் "விடிவு காலம்" வர முதல்வர் ஏற்பாடு செய்ய வேண்டும்.

வலங்கைமான், அப்துன் ரமேஷ்.



3. 'அகஸ்தியருக்கு வயது ஐம்பது' - கட்டுரையைப் படித்து நெகிழ்ந்து போனேன். அமரர் கல்கி அவர்களின் சித்தி மகனான அகஸ்தியர் நிறுவனத்தின் நிறுவனர் அமரர் சுப்பிரமணியம் அவர்களின் புகைப்படத்தை வெளியிடாததற்கு மிகவும் வருந்துகிறேன். அடுத்த இதழிலாவது அவரது புகைப்படத்தை வெளியிடுவீர்களா?

நடுவட்டம், க. சம்பத்.

*(தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்து விட்டோம். - ஆர்.)*

4. சரத்குமாரிடம் கேட்கப்பட்ட வித்தியாசமான கேள்விகளுக்கு அவர் அளித்துள்ள புத்திசாலித்தனமான பதில்கள் அருமை; அட்டைப் படமும் அழகு.

சென்னை - 106, ஆர். என். ராஜாசாகிப்.

5. என்னுடைய படங்கள் எல்லாம் 85% வெற்றிதான் என்று உண்மையை 'ஓபனாக' ஒப்புக்கொள்ளும் சரத்குமார், "அடுத்த சூப்பர் ஸ்டார்...? ஐ டோண்ட் நோ!" என்று கூறுவதிலிருந்து, தன்னடக்கம் அவரிடம் நிறைய இருக்கிறது என்பதை எளிதாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

அரூர், மு. மதிவாணன்.

6. சரத்குமாரின் பேட்டி மிகவும் வித்தியாசமாய் இருந்தது. சுபாஷ் சந்திரபோஸின் வரலாறு குறித்துத் திரைப்படம் தயாரிக்க விரும்புவதும், அதுவும் இழப்பு ஏற்பட்டால் தாங்கிக் கொள்ள, சொந்தத் தயாரிப்பாய் எடுப்பதும் வரவேற்க வேண்டிய விஷயமாகும்.

திருவாரூர், புத்தகன்.

7. நட்பிற்கும், காதலுக்கும் இடையே உள்ள இடைவெளியைத் துல்லியமாகக் காட்டிய சத்தியப்பிரியாவின் "வசீகரன்" என்னையும் வசீகரித்தான். "நான் நேசிச்சவர் என்னை நேசிக்கலைன்னா நான் அவருடைய நினைவுடன் வாழ்ந்து உயிர் விடணுமா?" என்ற ரேணுகாவின் கேள்வியில் அடங்கியுள்ள தன்னம்பிக்கை, பல பேருக்குச் சிறந்த வழிகாட்டும்.

திருத்துறைப்பூண்டி, வி. என். ஜீவா.

8. சிந்தாமணியின் விடாமுயற்சியும், வெற்றியும் பெண்களுக்கு மட்டும் அல்ல, அனைவருக்குமே உற்சாகம் தரும் உன்னத டானிக்!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

9. 'கிராக்கிப் படிக்கு ஆபத்து' தலையங்கத்தில் அரசின் சொத்தைக் காய்களைத் தராசில் நிறுத்துப் பார்த்துத் தூர வீசியதோடு, அடுத்து உடனே நல்ல அறிவுரைக் காய்களை அழகாக முன்நிறுத்தியுள்ளீர்கள்.

முருங்கப்பேட்டை.., பொன். ராஜேந்திரன்.

10. 'மாதச் சம்பளக்காரன் தலையில் கை வைத்தால் பஸ்மமாவது இந்த ஆட்சியாகத்தான் இருக்கும்!' என்று தலையங்கத்தில் எச்சரித்திருப்பது, மாதச் சம்பளக்காரர்களின் தீராத பற்றாக்குறை என்னும் உடல்வலிக்குத் தாய்மையுடன் வெந்நீர் ஒத்தடம் கொடுத்ததைப் போல மிகவும் இதமாக இருந்தது.

திருச்சி, கண்ணம்மா இராமசாமி.

11. தலையங்கம் படித்தேன். கிராக்கிப்படியால் பயன்பெறுபவர்கள் குறிப்பிட்ட ஒரு சாராரே. அன்றாடக் கூலி வாங்குவோர் போன்ற பெரும்பாலோருக்குக் கிராக்கிப்படி கிடைப்பதில்லை. எனவே அரசு அனைவருக்கும் பயன்தரும்படியாக விலைவாசியைக் குறைப்பதுதான் சிறந்த வழியே தவிர வேறு இல்லை.

திருச்சி - 1, ஹ. ராமமூர்த்தி.

12. சரத்குமார் பேட்டியில், 'நீங்கள் அடுத்த சூப்பர் ஸ்டாரா?' என அவரிடம் கேட்டு இருக்கிறீர்கள். ரஜினிகாந்த், சினிமா உலகத்தில் இருக்கும் வரை அவர்தான் சூப்பர் ஸ்டார். சூப்பர் ஸ்டார் என்றாலே ரஜினி. ரஜினி என்றாலே சூப்பர் ஸ்டார். அடுத்த சூப்பர் ஸ்டார் என்ற பேச்சுக்கே இடமில்லை.

சென்னை - 41, ஜே. ரஜினி ரமேஷ்.

# செவ்வல்லி

செவ்வல்லி சாலையோரமாய் வாய்க்கால் மதகில் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். அவளது பார்வை என்னவோ வெளுத்துக் கொண்டிருக்கும் கிழக்கின் அழகையே பார்ப்பது போலிருந்தாலும் மனம் உலையாய்க் கொதித்துக் கொண்டிருந்தது.

அவளுக்கு விழிப்பு வந்து வெகு நேரம் இருக்கும். இப்போதெல்லாம் அவளுக்குத் திடீர் திடீர் என்று விழிப்பு வந்து விடுகிறது. பின்பு தூக்கம் மறந்து போகிறது. இந்த மூன்று மாத காலமாகவே அப்படித்தான். தூக்கத்தில் பழக்கம் காரணமாய்க் கணவனைத் தன்னோடு அணைத்துக் கொள்ள கை நீளும் போது தென்படும் வெறுமை நெருப்பாய்ச் சுடும். சட்டென்று விழிப்பு வந்து விடும்.

'ப்ச்... மகராசன் நம்மை விட்டுட்டுச் சுடுகாட்டுக்குப் போய்த்தான் நாளாச்சே...!' மணக தணலில் விழுந்த பூவாய்ச் கருண்டு கொள்ளும்.

பிறகு கணவன் இல்லாத குடிசையில் ஒற்றையாய் இருக்கவே பிடிக்காது. வெளியே வந்து எதிரே இருக்கும் இந்த வாய்க்கால் மதகில் உட்கார்ந்து கொள்வாள். மேலே ஆகாயத்தை நிமிர்ந்து பார்ப்பாள். நட்சத்திரங்கள் இவளைப் பார்த்து, 'கலங்காதே... இறப்பு எல்லோருக்கும் உண்டு' என்று ஆறுதல் சொல்லும்.

மறக்கத்தான் நினைக்கிறாள். முடிந்தால்தானே!

இன்றும் அப்படித்தான்... துரை...! செவ்வல்லியின் புருஷன். அவள் கழுத்தில் தாலி கட்டி அவளோடு வாழ்ந்த இந்த ஆறாண்டு காலத்தில் அவளைப் பஞ்சு மெத்தையில் படுக்க வைத்துப் பாலும் தேனும் ஊட்டி விடவில்லைதான். பொன்னால் இழைத்துப் பட்டால் போர்த்தி விடவில்லைதான். நிமிர்ந்தால் இடிக்கும் குடிசைதான். ஆனால் 'அல்லி...அல்லி' என்று மூச்சுக்கு முன்னூறு தடவை அன்பால் குளிப்பாட்டுவான். அவள் லேசாய் முகம் சுருங்கினால், ''என்னாச்சம்மா... ஏனிப்படி இருக்கே...!''ன்னு பூவாய்த் தாங்குவான். அவனது சீராட்டுதலில் அவளுக்கு உலகமே அல்பமாய்த் தெரியும். 'இதுதான் வாழ்க்கை... இதுதான் சாகவதம்' என்பது போல் அவளைச் சந்தோஷமாய் வைத்திருந்தான்.

துரைக்குத் தொழில் உப்பு வியாபாரம். கஷ்டமான தொழில். சொற்ப லாபம்.

ஆனாலும் தினம் இரண்டு மூட்டை உப்பாவது விற்றுத் தீர்த்து விடுவான். ஆள் பார்த்து, முகம் பார்த்து 'ஐயான்னும் அம்மான்னும்' குழைந்து குழைந்து பேசுவான். அவனது இங்கிதப் பேச்சுக்கு மயங்கி, வாங்காதவர்கள் கூட அவனைக் கூப்பிட்டு வாங்குவார்கள்.

அவனோடு வாழ்ந்த அந்த ஆறாண்டு கால வாழ்வு புது வெல்லம் போல் எவ்வளவு தித்திப்பாய் இருந்தது!



கல்யாணமாகி ஒரு வருஷமான துமே... செவ்வல்லியின் வயிற்றில் 'புழு பூச்சி ஒண்ணும் வைக்கக் காணோமேன்னு' அவனுடைய சொந்த பந்தம் முணுமுணுக்கத் தொடங்கி, நாளாக நாளாக அவனது அண்ணன் தம்பிகளே... ''இவ மலட்டு முண்டம்டா... இவளைத் 'தீத்து' விட்டுட்டு வேற ஒருத்தியைக் கட்டிக்கடா...'' என்று அடம்பிடிக்கத் தொடங்கி விட்டனர்.

அந்தப் பேச்சுக்கெல்லாம் கொஞ்சம் கூட தாட்சண்யமில்லாமல் பதில் சொன்னான்.

''புள்ளைக்குட்டி பொறக்காட்டா பரவாயில்லே... எனக்கு அவ மட்டும் போதும். யாராவது அவளை மலட்டு முண்டம் அப்படி இப்படீன்னு பேசினீங்க நான் மனுசனாவே இருக்க மாட்டேன்.. ஆமா...!''

அன்று இரவு அவளை மூச்சுத் திணறும் படி கட்டிக் கொண்டு அவளது முகமெங்கும் முத்தமிட்டபடி ஆறுதல் சொன்னான்.

'அப்படிப்பட்டவனைத் தன்னோடு பொத்திப் பொத்தி வச்சிருந்தும் பாவி



# உத்தமசோழன்

எமன் எப்படியோ கொண்டு போய் விட்டானே...!'

'சடேர்... சடேர்...' - சப்தம் கேட்டுத் திரும்பினாள்.

அவளது பக்கத்து வீட்டுக்கார வடிவேலு கையிலிருந்த ஆளுயர மூங்கில் கழியால் அவன் வீட்டுக் கழுதைகளின் நடு முதுகில் ஓங்கின பாரம் வீசிக் கொண்டிருந்தான். உப்பு மண்டிக்குக் கழுதைகளை அதட்டி ஓட்டிக் கொண்டிருந்தான். நேரமானால் உப்பு தீர்ந்து போகும். உப்பு இல்லையென்றால் வியாபாரம் இல்லை... வியாபாரம் இல்லையென்றால் வயிற்றைக் காலியாகப் போட வேண்டியதுதான்.

'சரி.. அதுக்காக இப்படியா? கழுதைன்னா அதுக்கு மட்டும் உயிர் இல்லையா... வலிக்காதா... அதே கம்பாலே

**''இதப்பாரு மாமா.. கழுதை மேல உப்பு யாவாரம் பண்றதை விட்டுடணும். அதுங்களை இம்சைப்படுத்தி நாம வயிறு வளக்குறதை விட பட்டினி கிடந்தே செத்துப் போகலாம்!''**

நாம ஒரு அடி வாங்கினா என்னாவோம்...!'

அல்லி துடித்துப் போனாள்.

மீண்டும் 'மடேர்.. மடேர்..!'

'அடே கட்டையிலே போறவனே... அந்த வாயில்லா ஜீவன்களை அடிச்சு நொறுக்காதேடா.. பாவி...!' என்று நாக்கு நுனி வரை வந்த வார்த்தைகளை உதட்டை மூடி நிறுத்திக் கொண்டாள்.

சொன்னால் மட்டும் என்னவாம்...?

''உன்ன எவண்டி கேட்டது..'' என்று கையிலிருக்கும் தடியாலே அவள் மீதே வீசினாலும் வீசுவான். அவன் அப்படியொரு முரடன்! அப்புறம் அந்தக் கோபத்தைத் தீர்த்துக் கொள்ள மறுபடியும் அதுகளை அடிப்பான்.

'உப்பு வியாபாரிகளிடம் மாட்டிக்கிட்டுக் கழுதைங்க படற அவஸ்தை இருக்கே அது என்ன.. .கொஞ்ச நஞ்சமா...?'

அதுகள் எங்காவது மேயப் போய் விடும் என்று சதா சர்வகாலமும் முன்னங்கால்கள் இரண்டையும் சேர்த்துக் கட்டிப் போடுவது.. அப்படிக் கட்டிப் போட்ட நினைப்பே இல்லாது, வேகமாக நடக்கவில்லையென்று சொடேர் சொடேரென்று அடிப்பது.



"ஞாபகமறதி ரொம்ப அதிகமா இருக்கு டாக்டர்!"
"எப்படிச் சொல்றீங்க?"
"லஞ்சம் வாங்கினவங்ககிட்டேயே மறுபடியும் லஞ்சம் கேட்டுடறேன்!"
- எஸ். முகம்மது யூசுப்



'நீக்கு செவப்பு வரவே வராது' என்று சொல்லி அடிக்கடி சூட்டுக் கோலை நெருப்பில் பழுக்க வைத்து இஷ்டத்திற்கு அதுகளின் உடம்பெல் லாம் சுட்டுத் தீய்க்க வேண்டியது.

பின்பு சுட்ட இடமெல்லாம் புண்ணாகி, காக்கை கொத்தும்! உப்புக் கசிந்த சாக்கைத் தூக்கி அந்தப் புண் மீது போட வேண்டியது. வெந்த புண்ணில் உப்புக் கசிவு பட்டு இன்னும் எரிய வேண்டியது!

தாலி கட்டி துரையோட வந்ததும் அவனிடம் முதன் முதலாகச் சொன்னது இதுதான்.

"இதப்பாரு மாமா.. கழுதை மேல உப்பு யாவாரம் பண்றதை விட்டுடணும். அதுங்களை இம்சைப்படுத்தி நாம வயிறு வளக்குறதை விட பட்டினி கிடந்தே செத்துப் போகலாம்!"

- அப்படிச் சொன்னவளின் இரக்க மனசு அவனுக்கு ரொம்பப் பிடித்துப் போனது.

"சரிங்க ராணியம்மா... இனிமே சைக்கிள்லே கொண்டு போயி யாவாரம் பண்றேன்...!"

சொன்ன மாதிரி மட்கார்டு இல்லாத சைக்கிளில் அகல கேரியரில் உப்பு மூட்டையைச் செங்குத்தாக நிறுத்தி வைத்து, கயிறு போட்டுக் கட்டாமல் பேலன்ஸ் பார்த்து சைக்கிள் ஓட்டும் வித்தையைக் கற்றுக் கொண்டு விட்டான்.

செவ்வல்லிக்குச் சொல்லி மாளாத சந்தோஷம்.

அதன் பிறகு வியாபாரத்திற்காகத் தெருத் தெருவாய்க் கழுதையோடு கழுதையாய்க் கால் தேய நடக்க வேண்டிய கஷ்டமில்லை. ஒரே நாளில் இரண்டு தடவை உப்பு எடுத்துக் கொண்டு போய் விற்று விட்டு நேரத்தோடு வீடு திரும்ப முடிந்தது.

அது மட்டுமா..?

கொஞ்சம் கொஞ்சமாகக் காசு சேர்த்து இருநூறு குழி நிலம் வாங்க முடிந்தது. நாலாயிரம், ஐயாயிரம் போல போஸ்ட் ஆபீசில் பணம் போட்டு வைக்க முடிந்தது.

**ஆ**னால் எதையும் ஆண்டு அனுபவிக்காமல் போய்ச் சேர்ந்து விட்டான்!

பத்தாம் நாள் காரியம் முடிந்த பிறகு ஒருநாள் தெருக்காரர்கள் ஒன்று கூடி செவ்வல்லியிடம் சொன்னார்கள்.

"நீயோ சின்னஞ்சிறுக... குழந்தை குட்டி கிடையாது. உன் கொழுந்தன் கணேசனுக்கு இன்னும் கல்யாணம் ஆகலே... அவனைக் கட்டிக்கோ..."

யாரோ கொதிக்கும் வெந்நீரை முகத்தில் ஊற்றியது போல் துடித்துப் போனாள்.

"அந்தப் பேச்சை விட்டுட்டு வேறு பேச்சைப் பேசுங்க... எங்க மாமனைத் தொட்ட கையாலே வேறு எவனையும் தொட மாட்டேன்...!"

"இது என்ன இல்லாத வழக்கமா..." சாதி சனத்தின் வாதம்.

- அவளை மாற்ற முடியவில்லை.

"அப்படீன்னா... நீ மூட்டை முடிச்சைக் கட்டிக்கிட்டு உங்க அப்பன் வீட்டுக்குப் போயிடு...!"

"ஏன்...?"

"ஏனா... இந்தக் கொட்டகை, நிலம், போஸ்டாபீஸ் பணம் எல்லாமே எம் புள்ளை சம்பாதிச்சது. அதையெல்லாம் விட்டுட்டு மரியாதையா உங்கப்பன் வீட்டுக்குப் போயிடு... இல்லே நாங்க சொன்னதைக் கேளு..." பிள்ளையைப் பெற்றவள் சொன்னாள்.

அவள் ஊமையாய் நின்றாள்.

"நல்லா ஞாபகம் வச்சுக்கோ... இன்னிக்கு எட்டாம் நாள் நாங்க எல்லாரும் வருவோம்... ஒண்ணு உம் புருசனோட தம்பியைக் கட்டிக்கணும். இல்லே கட்டின துணியோட உங்கப்பன் வீட்டுக்குப் போயிடணும்.. முடியாதுன்னா நடக்கிறதே வேறே..."

அவர்கள் எதையும் செய்வார்கள். கொஞ்சம் கூட சவு இரக்கம் இல்லாதவர்கள். எதற்குமே பயப்படாதவர்கள்.

இன்றோடு அவர்கள் கொடுத்த கெடு முடிகிறது. வெளிச்சம் வந்ததும் அவர்களும் வந்து விடுவார்கள். துணிமணிகளை மட்டும் எடுத்து மூட்டையாகக் கட்டிக் கொண்டு தயாரானாள்.

தன் மாமனோடு வாழ்ந்த இந்தக் குடிசை இனி தனக்குச் சொந்தமில்லை என்று நினைத்ததும் கண்களில் நீர் கோத்துக் கொண்டது.

**வெ**ளிச்சம் பரவிய நேரத்தில் மதகோரம் ஒரு ஆள் சைக்கிளில் வந்து இறங்கினான்.

இவளைப் பார்த்து "கழுதை ரத்தம் கொஞ்சம் வேணும்... கொழந்த பொறந்திருக்கு...!" என்றான். ஆஸ்பத்திரியில் பிறந்த குழந்தைக்குக் கழுதை ரத்தம் கொடுத்தால் வியாதி வராது என்று, கூட இருந்த பெண்கள் சொன்னதன் பேரில் டாக்டருக்குத் தெரியாமல் வந்திருக்கிறான்.

இவள் இல்லை என்று சொல்வதற்குள் பக்கத்துக் குடிசை பாஞ்சாலி "பத்து ரூபா




ஆகும். சம்மதமா...?'' என்றாள். அவன் தலையாட்டினான்.

அவள் ஒரு பழைய கத்தியை எடுத்துக் கொண்டு எதிரே கட்டியிருந்த கழுதைக் கருகே சென்ற போது அது சடாரென்று எழுந்து நின்று, காதுகள் விடைக்க இவளை ஒரு மாதிரி உறுத்துப் பார்த்தது.

வேகமாகப் போன பாஞ்சாலி சட்டென்று நின்று விட்டாள். பிறகு என்ன நினைத்தாளோ என்னவோ.

''கழுதை ரத்தம் இல்லீங்க...!'' அந்த ஆளிடம் சொல்லி விட்டுப் பொசுக்கென்று கொட்டகைக்குள் நுழைந்து கொண்டாள்.

பாஞ்சாலி அப்படி நடந்து கொண்டதற்கு என்ன காரணம்...? - செவ்வல்லிக்குப் புரிந்து விட்டது.

'நேற்றும் இதே போல் ஒருவன் கழுதை ரத்தம் கேட்டு வந்தான். பாஞ்சாலியோட அண்ணன்காரன் கட்டிக் கிடந்த கழுதைகிட்ட உட்கார்ந்து அதன் காதை மடக்கி அறுக்க ஆரம்பித்தான். அதன் உடலெல்லாம் புண்ணாகி, காக்கை கொத்தி, உப்புப்பட்டு எரிந்த ஆத்திரமோ... வலி தாங்க முடியாத கொடுமையோ... திடீரென்று ஆக்ரோஷமாய்க் கத்திக் கொண்டு அவனைக் காலால் உதைத்துத் தள்ளி, கடித்து, மிதித்து, துவம்சம் செய்து விட்டது. அவன் போட்ட கூப்பாட்டில் தெருவே கூடி விட்டது.

இப்போது அதன் காதை அறுத்து ரத்தம் எடுக்கப் போன பாஞ்சாலிக்கு, அந்தக் கழுதை எழுந்து நின்று பார்த்த பார்வையில் நேற்று நடந்தது ஞாபகத்திற்கு வந்து எச்சரித்திருக்க வேண்டும். அதனால் தான் போன வேகத்திலேயே திரும்பி, குடிசைக்குள் பதுங்கிக் கொண்டாள்.

செவ்வல்லிக்கு ஒரு விஷயம் பளிச்சென்று புரிந்தது.

'ஓடறவன் ஓடிக்கிட்டே இருந்தா வெரட்டுறவன் வேக வேகமா வெரட்டிக்கிட்டேயிருப்பான். ஓடறவன் திரும்பிக்கிட்டா வெரட்டுறவன் வெலவெலத்துப் போயிடுவான்...!'

சரேலென்று அவளுக்குள் ஒரு அசாத்திய தைரியம் வந்தமர்ந்தது.

'இன்னும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நம்ப சாதி சனம் வந்து நின்று 'என்ன சொல்றே'ன்னு... மிரட்டும். 'சொல்றதுக்கு ஒண்ணுமில்லே.. நான் யாரையும் கட்டிக்கவும் மாட்டேன். எம் மாமன் சம்பாதிச்ச வீட்டை விட்டு வெளியே போகவும் மாட்டேன். மீறி ஏதாவது பேசினீங்கன்னா நான் ராட்சசியா மாறிடுவேன்னு சீறிட வேண்டியதுதான்.. 'வரட்டும்... பாத்துக்கலாம்...!'

எதிரில் கட்டியிருந்த கழுதையை நன்றியுடன் பார்த்தாள் செவ்வல்லி.

● மனு...



● ...எதிர் மனு!





## நீங்கள் கேட்டவை

– தராசு

# ஓங்கி

● வி. ஸ்டாலின், சிதம்பரம்.

? "அடுத்த வாரிசு என்று அறிவிப்பதற்கு தி.மு.க. ஒன்றும் சங்கரமடம் இல்லை" என்று கலைஞர் குறிப்பிட்டிருக்கிறாரே?

! சங்கரமடம் என்றில்லை எந்த ஒரு நிறுவனம், கட்சி, அல்லது அரசுக்கும் அதன் பல் வேறு துறைகளுக்கும் Second in Command யார் என்பது அதனதன் விதிமுறைகளை அனுசரித்து நிர்ணயிக்கப்படுதல் மிகவும் அவசியம். சுயநலத்துக்காக இதைச் செய்யத் தவறும் போது எதிர்பாராத தருணங்களில் குழப்பம் மலியும். இதற்கு எத்தனையோ உதாரணங்கள் சமீப இந்திய வரலாற்றி லேயே காண முடியும். கலைஞருக்குத் தெரியாதது அல்ல; ஏதோ நிர்ப்பந்தங்களின் கைதியாகிப் பேசுகிறார்.

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.

? தம் மீது உள்ள குற்றச்சாட்டைத் தேர்தல் கமிஷனர் சேஷன் விசாரிக்கக் கூடாது என்பதற்கு ஜெ. கூறும் காரணம் பற்றி...?

! அந்தக் காரணம் ஏற்புடையது அல்ல என்று சேஷன் நீதிமன்றத்தில் எதிர் மனு தாக்கல் செய்துள்ளாரே. கவனியுங்கள். இதற்கு மேல் நாம் கருத்துச் சொல்வது இந்தக் கட்டத்தில் தவறு.

● அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? மௌன விரதத்தில் வெற்றி பெற்றது கே.கே.எஸ்.எஸ்.ஆரா? வீரப்பனா?

! சந்தேகமின்றி முன்னவர்தான். பின்னவர், 'எனக்கு மந்திரி பதவி வழங்கப்படவில்லை; வழங்கப்பட்டதை ஏற்க மாட்டேன் என்று நான் கூறி விட்டதாகப் பேசப்படுவது தவறு' என்று இல்லாத பிரச்னைகளுக்குக் கூடப் பதிலளித்துச் செய்தியில் இடம்பிடிக்கவே முயற்சி செய்கிறார்.

● வி. சிவா, மதுரை.

? முந்நாள் துணைவேந்தர் நெ.து. சுந்தரவடிவேலு மறைவு குறித்து?

! அன்றைக்கே மதிய உணவுத் திட்டத்தைப் பள்ளிகளில் சீராக அமல்படுத்தவும் பத்தாம் வகுப்பு வரை இலவசக் கல்வி வழங்கவும் காமராஜருக்கு வலக்கரமாக விளங்கியவர் என்பதுதான் முதலில் நினைவுக்கு வருகிறது என்றாலும் சிறந்த பேச்சாளர், திறமையான கட்டுரையாளர் என்பதும் மறக்க முடியாது. சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பதவி வகிக்க ஆற்றலாலும் இடைவிடா உழைப்பாலும் தகுதி பெற்றவர்.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? 'தமிழ்நாட்டில் அ.தி.மு.க. தவிர வேறு கட்சி காலூன்ற முடியாது' என்று குழந்தைவேலு கூறியுள்ளாரே?

! அவர்தான் எங்கெங்கெல்லாமோ போய் காலூன்ற முடியாமல் திரும்பி வந்து விட்டாரே. அதனால் அப்படித்தான் சொல்வார்.

● மு. எத்திராஜ், குடியாத்தம்.

? இ. காங்கிரஸ் மாநாட்டிற்காகத் தங்கள் குடிசைகளை இடித்துத் தரைமட்டமாக்கியதைக் கண்டித்துப் பிரதமர் இல்லம் முன் மறியல் செய்ய முயன்றவர்களைக் கைது செய்துள்ளது பற்றி...?

! ஒரு அநீதியைக் களைவதற்குப் பதில் மற்றொரு அநீதியைக் கூடுதலாக இழைத்ததாகிறது. இதே நேரத்தில் பிரதமர் பொது மக்களைச் சந்தித்து மனுக்களைப் பெற்றுக் கொள்வதாகவும் பத்திரிகைகளில் புகைப் படங்கள்! எல்லாம் கண்துடைப்பு மாயமாய் இருக்கிறது!

● பொன். கந்தசுவாமி, திருச்சி.

? திருவரங்கம் கருவறை நுழைவுப் போராட்டம் என்று மக்கள் கலை இலக்கியக் கழகம் என்ற அமைப்பு அறிவித்துள்ளதே?

! ஆலயப் பிரவேசத்துக்கு முன்பு போராட்டம் நிகழ்ந்தது சரி. இன்று ஆலயப் பிரவேசத்துக்குத் தடையில்லை. ஆனால் கருவறைக்குள் நுழைவது என்பது வேறு. அங்கு பணியாற்றுவோர் தவிர வேறு யாருக்குமே அதற்கு அனுமதி வழங்கப்படக் கூடாது. இந்தப் புனித உணர்வும் பயபக்தியும் போய் விட்டால் அப்புறம் ஆலயம் தொழுவது என்ற அம்சமே அர்த்தமற்றதாகி விடும். மூடப் பழக்கங்களை ஒழிக்க வேண்டியது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவுக்கு நல்ல மரபுகளைப் பாதுகாப்பதும் அவசியம்.

● எஸ். ரவி, கொ. கருப்பூர்.

? 'பத்திரிகைக் கணிப்பு மக்கள் கருத்து

# தட்டுவதென்றால் என்ன?

பூலவலை' என்று கூறியுள்ளாரே, ஜெய லலிதா?

! கணிப்பு அவருக்குச் சாதகமாக அமைந் திருந்தால் வேறு மாதிரி பேசியிருப்பார்!

● கி. இரமேஷ் பாபு, சேலம்.

? ஓங்கி தட்டுவது என்றால் என்ன?

! தாமரைக்கனியிடம் போங்கள்; செயல் முறை விளக்கமே தருவார்!

● சிவ. கலாதரன், சிதம்பரம்.

? 'டெண்டுல்கர் விரைவில் இந்திய அணியின் காப்டன் ஆவார்' என்று அசாருதீன் பேசி யிருக்கிறாரே?

! காப்டன் ஆகட்டும்; ஆனால் விரைவில் வேண்டாம்; நாளாவட்டத்தில். இப்போது சச்சின் நல்ல ஃபார்மில் இருக்கிறார்; அதைக் கெடுப்பானேன்!

● பாலசுப்பிரமணியம், செங்குன்றம்.

? 'மிக வேகமாகப் பரவி வரும் ஊழல் நாட்டின் வளர்ச்சியைத் தடுக்கிறது' என ஜனாதிபதியே கவலை தெரிவித்துள்ளாரே?

! இல்லையா பின்னே, பாருங்களேன் ருஷ்யாவிலிருந்து கச்சா எண்ணெய் தருவிக்க ருஷ்ய அதிகாரிகளுக்கு இந்தியா கமிஷன் தந்திருக்கிறது என்று ருஷ்யாவில் இன்று அமர்க்களப்படுகிறது. முப்பது மிலியன் டாலர்களாம்! அப்புறம் இந்தியர்கள் அயல் நாடுகளில் பதுக்கி வைத்துள்ள பணமெல்லாம் இங்கு வந்து சேர்ந்தால் நமது பொருளாதாரப் பிரச்னைகள் அனைத்தும் மாயமாய் மறைந்து விடும் என்பது மற்றொரு கணிப்பு... இப்படி எத்தனையோ கூறலாம். நாட்டின் வளர்ச்சி தடைப்படாமலா இருக்கும்!

● பி.கே. சங்கர், சென்னை.

? அண்மையில் தங்களை அதிர்ச்சியுறச் செய்த அரசியல் ஸ்டண்ட்?

! சென்னை அதன் சுற்றுப்புறங்களில் கொள்ளையடித்தவர்களைப் பிடித்து, கொள்ளையடிக்கப்பட்ட பொருள்களை உரியவருக்குத் திருப்பித் தந்தது நகர போலீஸ். இப்படி கொள்ளையடித்தவர்கள் இலங்கை அகதிகள் என்ற செய்தி ஆச்சர்யம் அளிக்கவில்லை; ஓரளவு எதிர்பார்த்ததுதான். அவர்களுக்கும் புலிகளுக்கும் தொடர்பு உண்டா என்று போலீஸ் ஆராயும் என்றும் எதிர்பார்க்கலாம். அதிர்ச்சி அளித்த விஷயம் என்னவென்றால், உரியவரிடம் திருப்பித் தரப்பட்ட கொள்ளைப் பொருள்களைத் திரும்பப் பெற்று, மறுபடி முதல்வர் கரத்தால் திருப்பிக் கொடுக்கச் சொன்னார்கள் என்ற செய்திதான்! இப்படியும் ஒரு பப்ளிஸிடி ஆசையா!

● டி. உதயகுமார், சென்னை – 52. ❒

? 434 டன் கோதுமை ஆவடியில் உள்ள இந்திய உணவுக் கழகக் கிடங்கில் வீணாகியுள்ளது பற்றி...?

! அது மட்டுமானால் கூடப் பரவாயில்லையே! இந்த உணவுக் கழகத்தின் ஆடிட்டர்கள் கணக்கு வழக்குகளைப் பரிசீலித்து, குற்றம் குறைகளைப் பட்டியலிட்டிருப்பதைப் பார்த்தால் தலைசுற்றுகிறது! இத்தனை ஊழலும் திறமையின்மையும் மலிந்திருந்தால் எந்த அரசுத் துறைதான் உருப்படும்? பேசாமல் மேல்நாடுகளில் உள்ளது போல் தனியார் துறையில் சங்கிலித் தொடராக டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் உருவாக வழிவகுப்பதே நல்லது!

● நாகராஜன், கடலூர்.

? சிறந்த பதிப்பாளர் விருது வானதி திருநாவுக்கரசுக்குக் கிடைத்திருப்பது பற்றி தராசின் கருத்து...?

! தகுதியான ஒருவருக்குச் சரியான ;தில் வழங்கப்பட்ட பொருத்தமான விருது.

● ஆர். விஜி, அரகண்டநல்லூர்.

? இளையதலைமுறைக்கு ஏற்ற வழிகாட்டிகள் இன்று இல்லாதது உண்மைதானே?

! பாருங்களேன், 'புராணங்கள் அபத்தம் என்பதால் அதுபோன்ற காரெக்டர்களில் நான் நடிப்பதில்லை' என்கிறார் கமல். மறுபக்கம் 'கலைஞன்' படம் ரிலீஸ் ஆன அன்று கமல் கட்-அவுட்டுக்கு அவரது ரசிகர்கள் பாலபிஷேகமும் பன்னீர் அபிஷேகமும் செய்வதைக் கண்டுகொள்ளாமல் மௌனம் சாதிக்கிறார். இரண்டுமே சரியில்லை என்னும் போது இளையதலைமுறை தடுமாறித்தானே போகும்!

★ மௌனம்...





★ ...விருது?

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
டி. உதயகுமார்,
3 ஏ, பூங்கா தெரு,
செங்குன்றம், சென்னை – 52.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 34. சூழ்ச்சி வீணாயிற்று!

**ப**ரதனுக்கு விஷயம் இப்போது விவரமாகத் தெரிந்தது. எவ்வளவு பெரிய அநியாயம் நடந்து விட்டது என்பதை உணர்ந்து, தாங்க முடியாத கோபமும் துக்கமும் மேலிட்டுத் தன் தாயைப் பார்த்துச் சொல்லலானான் :

''என்ன காரியம் செய்து விட்டாய்? இந்த ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி எனக்குச் சொல்லவும் உனக்குத் தோன்றிற்றே! தகப்பனையும் அண்ணனையும் இழந்து விட்ட எனக்கு ராஜ்யாதிகாரம் என்ன வேண்டியிருக்கிறது? தந்தையை உயிர் மாள வைத்து, ராமனையும் காட்டுக்கு அனுப்பி விட்டு என்னை அரசு புரியச் சொல்லுகிறாயே! ரணகாயப் படுத்தி விட்டு அதன் மேல் உப்புப் போட்டு வேதனை செய்கிறாயே! தசரத மகாராஜாவுக்குப் பத்தினியாக வந்து சேர்ந்தாயே! புத்தி கெட்டுப் போய் உன்னை அவர் அடைந்தார். நெருப்பை மடியில் கட்டிக் கொண்டார். என் தந்தையைக் கொன்று விட்டாயே! கௌசல்யையும் சுமித்திரையும் இறக்கத்தான் போகிறார்கள். உன்னிடம் அவ்வளவு அன்போடிருந்த ராமனை, ஆஹா! நீ எப்படித்தான் வனத்துக்கு அனுப்பினாயோ! பெரிய தாயார் கௌசல்யை உன்னை உடன்பிறந்த சகோதரி போல எண்ணி நடத்தி வந்தாளே. அவளுடைய வயிற்றில் பிறந்த அருமை மகனைக் காட்டுக்கு அனுப்பி விட உனக்கு எப்படித்தான் எண்ணம் உண்டாயிற்றோ? ராமனிடத்தில் நான் வைத்திருக்கும் அன்பு உனக்குத் தெரியாமல் போய் விட்டதா? உன் துராசை உன் மூளையை நாசம் செய்து விட்டது. என் உயிரைப் போலுள்ள ராமனைக் காட்டுக்கு அனுப்பி விட்டு எனக்குச் சந்தோஷம் ஊட்டப் பார்த்தாயே, உன் மடமையை என்னென்று சொல்லுவேன்? மகா பராக்கிரமசாலியான தந்தை மன்னன், ராம லக்ஷ்மணர்களைத் தாம் பெற்ற பெரும் பக்கபலமாக எண்ணி வந்தாரே? அவர்களைக் காட்டுக்குத் துரத்தி விட்டு, என்னை இந்த ராஜ்யப் பொறுப்பை ஏற்று நடத்தச் சொல்லுகிறாயே, இது என்னால் முடியுமா? முடிந்தாலுங்கூட நான் ஒப்புக் கொள்வேனா? ஒருநாளும் உன் ஆசை நிறைவேறாது. நான் நிறைவேற்றவும் மாட்டேன்! நீ இவ்வளவு பெரிய பாவச் செயல் புரிந்து விட்ட பிறகு உன்னை என் தாயாகப் பாவிக்க முடியாது. உன்னை நான் நீக்கி விட்டேன். பரம்பரையாக ராஜகுலங்களில் வழங்கி வரும் முறையைப் புறக்கணித்து இளையவனுக்குப் பட்டம் கட்டும் எண்ணம் உனக்கு எப்படித் தோன்றிற்று என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. உலகமெல்லாம் நம்மைக் குற்றம் கூறும் என்பது உனக்குத் தெரியவில்லையே! ராஜாக்களுக்கெல்லாம் இது பொது விதி. நம்முடைய குலத்திலும் இதுவே முறை. உன் எண்ணத்தை நான் ஒரு நாளும் பூர்த்தி செய்ய மாட்டேன். வனம் போய் அண்ணனைத் திரும்ப அழைத்து வரப் போகிறேன். அவனுக்கே பட்டம் சூட்டி என் உள்ளம் மகிழ நான் அவனுக்கு அடிமை செய்து வருவேன். உன் எண்ணம் நிறைவேறாது.''

இவ்வாறு பரதன் தாயைப் பார்த்துக் கோபத்தினால் வாய் குளறப் பேசினான். வரவர துக்கம் அதிகரித்து விட்டது. இப்படிச் செய்து விட்டாளே, தனக்கு அழியாப் பழி உண்டாக்கி விட்டாளே என்ற பெரும் ஆத்திரத்தில், அவள் தாய், தான் அவள் மகன் என்ற உணர்ச்சியைத் தன் மனத்திலிருந்து முற்றிலும் அகற்றி விட்டான். அதன்



காரணமாகவே துக்கமும் கோபமும் பரதனுக்கு அதிகரித்து விட்டது. குகையில் சிங்கம் கர்ஜிப்பது போல் கர்ஜித்து, தாயை மிகக் குரூரமான மொழிகளால் நிந்திக்கலானான். பரதனுடைய சுபாவமும், ராமனிடம் அவனுக்கிருந்த அளவிலாத அன்பும், தந்தையை இழந்த துக்கமும், என்றும் எதிர்பாராத பெரும் பழி வந்து விட்ட சங்கட நிலையும் - ஆகியவற்றையெல்லாம் வைத்துப் பார்த்தால் பரதனுடைய உணர்ச்சி வேகமும் அதனின்று பிறந்த வசை மொழிகளும் நமக்குப் பொருள்படும். ஏதோ சாஸ்திரம் படித்த கல் மனப் பண்டிதர்களைப் போல் நாம் பரதன் பேசியதை அளந்து பார்க்கக் கூடாது. இம்மாதிரியான கட்டங்களிலே தான் கவியுள்ளம் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. இதை வால்மீகியிலும் பார்க்கலாம்; கம்பர் கவியிலும் பார்க்கலாம்.

**பொ**றுக்க முடியாத கோபாவேசத்தில் எழுந்து, தாயைப் பார்த்து உரத்த குரலில் மீண்டும் பரதன் பேசலானான் :

''நீ நாட்டுக்கு உதவாதவள்; நாட்டை விட்டு வெளியேற வேண்டியவள், கொடியவள், கெட்ட வழியைப் பின்பற்றி தருமத்தைக் கைவிட்டவள், நான் உன்னைப் பொறுத்தவரை செத்தேன் என்று வைத்துக் கொள். அரசனை யமனிடமும், ராமனைக் காட்டுக்கும் அனுப்பிய உன்னை வெறுக்காதவர் யார்? கொலையாளியாய்ப் போனாய். இந்தக் குலத்தைப் பாழாக்கி விட்டாய். நீ நரகமேயடைவாய். எனது அன்புக்குரிய தந்தை சென்ற உலகத்துக்கு நீ போக மாட்டாய். கோர பாதகம் செய்த உன்னைக் காண உன் மகனான நானே நடுங்குகிறேன். தாயுருவத்தில் வந்த என் மகா சத்துருவே! புருஷனைக் கொன்ற கொலை பாதகியே! உனக்கும் எனக்கும் இனி பந்தம் அறுந்து விட்டது. தர்ம ராஜாவான பாட்டனார் அசுவபதியரசனுடைய பெண்ணல்ல நீ, ஒரு அரக்கி. குலத்தைக் கெடுக்கவே அவருக்கு நீ பிறந்தாய். சத்தியமும் தருமமும் மனித உருக்கொண்ட என் அண்ணனைக் காட்டுக்குத் துரத்தி விட்டாய். என் தந்தையும் உயிர் நீத்தார். இரு விதத்தில் எனக்குத் தீங்கிழைத்தாய்.

''கௌசல்யா தேவியின் ஒரே குழந்தையான ராமனைக் காட்டுக்குப் போகச் செய்த நீ எந்த நரகத்துக்குப் போவாயோ! தாயின் உள்ளம் உனக்குத் தெரியாமற்போயிற்றே! புத்திரன் தாயின் உடலில் ஒரு பாகம் அல்லவா? தாயின் ஒவ்வொரு அங்கத்திலும் ஒரு பகுதியைக் கொண்டு உண்டான ஜீவனாயிற்றே! தாய்க்கும் மகனுக்கும் உள்ள இந்த உயிர்த் தொடர்பு உனக்குத் தெரியாதா? உயிரின் உயிராகிய மகனைக் காட்டுக்கு அனுப்பி, தாய் உள்ளத்துக்கு நீ விளைவித்த பெருந் துக்கத்துக்கு என்ன தண்டனை கொடுத்தால் தகும்?

''காமதேனுவுக்குக் கோடிக்கணக்கில் புத்திரர்கள் இருக்க, ஏதோ இரண்டு மாடுகள் ஏருக்குக் கட்டப்பட்டு, ஒரு மூர்க்கக் குடியானவனால் துன்புறுத்தப் படுவதைக் கண்டு, 'ஐயோ இந்தக் குழந்தைகள் வெய்யிலின் கொடுமை தாங்காமல் வயலில் கீழே விழுந்து விட்ட போதிலும் இந்த மூர்க்கன் இன்னும் இம்சிக்கிறானே' என்று காமதேனு கண்ணீர் சிந்தியது உனக்குத் தெரியாதா? தேவராஜன் மீது அந்தக் கண்ணீர்த் துளி விழுந்து அதன் சுவாசனையைக் கண்டு இது சுரபியின் கண்ணீராகவே இருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டு வருந்தினானல்லவா? கோடி புத்திரர்களைப் படைத்த சுரபி இரண்டு புத்திரர்களின் கஷ்டத்தைப் பொறுக்க முடியவில்லையே! கௌசல்யைக்கு நீ செய்த கொடுமை உனக்குத் தெரியவில்லையா? ஒரு மகனைப் பெற்றாள்; அந்த மகனை வனத்துக்கு அனுப்பி விட்டு, அதனால் நீயும் நானும் சுகம் அடைவோம் என்று எண்ணினாய், அரக்கியே! நீ பெரும் துக்கம் அடைந்து சாவாய் என்பது நிச்சயம். இறந்த பின்னும் துக்கமே உன் பங்கு. தந்தைக்குச் செய்ய வேண்டிய உத்தர

ராஜாஜி

கிரியைகளை முடித்து விட்டு, நான் வனம் சென்று, வீரன் ராமன் காலில் விழுந்து இராஜ்யத்தை அவனிடம் ஒப்புவித்து விட்டு, நீ எனக்குச் சம்பாதித்துத் தந்த பெரும் பழியைப் போக்கிக் கொள்வதற்காக ராமனுக்குப் பதில் நான் தண்டகாரணியத்தில் விரதம் பூண்டு வாசம் செய்வேன். நீ செய்த பாவத்தின் பாரத்தை என்னால் தாங்க முடியவில்லை. நீ உண்டாக்கிய கண்ணீர் வெள்ளத்தை என்னால் பார்க்க முடியவில்லை. நீ என்ன பிராயச்சித்தம் செய்து தப்புவாய்? கழுத்துக்கு உறி போட்டுக் கொண்டு உயிர் துறப்பாயா? அல்லது நெருப்பில் விழுந்து உயிர் விடுவாயா? அல்லது நீயே வனவாசம் செய்து தண்டகாரணியத்தில் ஆயுள் முழுதும் கழிப்பாயா? எப்படியானாலும் சரி, ராமனிடம் சென்று இந்தப் பூமண்டலாதிபத்யத்தை அவனிடம் ஒப்புவித்து எனக்கு நீ ஏற்படுத்தித் தந்த தோஷத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறேன்.''

இப்படித் தாயைக் கோபித்து மிகக் கொடிய முறையில் வசை மொழிகள் பொழிந்தான். காட்டில் புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையைப் போல் பெருமூச்செறிந்தான். அவன் கண்களினின்று ரத்தக் கண்ணீர் பெருகிற்று.

இன்னணம் இனையன
இயம்பி யானும்இப்
பன்னரும் கொடுமனப்
பாவி மா(டு)இரேன்
துன்னரும் துயர்கெடத்
தூய கோசலை
பொன்னடி தொழுவன்என்(று)
எழுந்து போயினான்

''இவள் பக்கத்தில் நிற்க முடியவில்லை. என் துக்கத்தைச் சொல்லிக் கொள்ளக் கோசலைத் தாயிடம் போகிறேன்'' என்று பெரிய அன்னையின் இல்லம் சென்றான்.

கைகேயினுடைய மனக் கோட்டை அழிந்தது. தன்னுடைய ஆசை ஒரு வினாடியில் புகைந்து போனதைக் கண்டாள். கீழே விழுந்து பரிதவித்தாள்.

**ரா**மாயண பாத்திரங்களில் பரதனைப் போன்ற ஒரு பரிசுத்த விக்கிரகம் வேறு இல்லை. வடநாட்டுக் கிராமங்களில் மக்கள் மிகவும் அனுபவிப்பது சித்திர கூடத்தில் ராம, பரத சந்திப்புத்தான். ராமாயணக் கதையில் இதுவே முக்கியமான பாகமாக அவர்கள் கருதி, பெரிய திருவிழா கொண்டாடுகிறார்கள். யார் எத்தனை பாவச் செயல்கள் செய்யத் துணிந்தாலும், ஒரு சிலர் தருமத்தைக் காக்க இருக்கவே செய்கிறார்கள். பேராசையும் புனைசுருட்டும் நிறைந்த உலகத்தில் பரஸ்பர நம்பிக்கையும் தைரியமும் அன்பும் உண்டாக்கித் தந்து மக்களை அறவழியில் நிறுத்தச் சில ஆத்மாக்கள் இருந்து கொண்டே வருவார்கள். தருமத்துக்கு ஆபத்து இல்லை.

(தொடரும்)



அமெரிக்காவில் ஒவ்வொரு ஒன்பது வினாடிகளிலும் ஒரு புதிய துப்பாக்கி உற்பத்தி செய்யப்படுகிறது என்பதைக் கண்டிக்கும் கார்ட்டூன்!
நன்றி : கார்டியன்

உ

பெரியவா துணை



# ஆஸ்திக அன்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!

நடமாடும் தெய்வமாய் நமக்கு நாளெல்லாம் அருள்பாலித்து வரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகள் வேதம் காட்டும் வழியே நல்வழி என்று இவ்வையகமே போற்றும் வகையில் தானே வழிகாட்டி வந்து கொண்டிருக்கிறார்கள்.

1. தர்மத்தின் மேல் பற்று - தன் தேன் சொரியும் அருள்வாக்குகளாலும்

2. எளியோருக்கு சேவை - 'பிடி அரிசி', 'நோயுற்றோருக்கு 'பிரசாதங்கள்' போன்ற திட்டங்களாலும்

3. வேதங்களைப் போற்றி பாதுகாத்திட - 'வேத ரக்ஷண நிதி டிரஸ்ட்' என்றும்

4. கோவில்களில் பூஜை செய்யும் எளியோரை வாழ்விக்க - 'கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல நிதி டிரஸ்ட்'.

என்றும் நமக்கெல்லாம் நன்மை தர ஏற்படுத்தி அவை எல்லாம் இன்று ஆல் போல் தழைத்து அருகு போல் வேர் விட்டு அருள் மழை பொழிந்து வருவது யாவரும் அறிந்ததே! அள்ள அள்ளக் குறையாத அக்ஷய நிதியாகவே மகா பெரியவர் அருள் பெருகி வந்து கொண்டேயிருக்கிறது!

இப்படிப்பட்ட பரமாத்மாவை நாம் புரிந்து கொள்ள நம் சந்ததிகள் தெரிந்து கொள்ள அவர்கள் அருளாட்சி பற்றி குழந்தைப் பருவத்திலே அவர்கள் பட்டத்திற்கு வந்தது முதல் நாளை வரை நடந்துள்ள, நடந்து வருகிற நல்லவைகளை எல்லாம் சிற்பம், ஓவியம், இயல் மூலமாகத் தெரிவிக்க அருமையான மணி மண்டபம் ஒன்று காஞ்சி மாநகர் அருகில் ஓரிக்கை (ஓர் இரவு இருக்கை) என்னுமிடத்தில் எழும்ப உள்ளது. நூறாண்டு ஜயந்தி விழா காணவிருக்கும் நம் காஞ்சி மாமுனிவருக்கு அர்ப்பணமாகும் இந்த ''பெரியவா சதாப்தி மணிமண்டபம்'' எழும்ப பூஜ்ய ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளும் பாலப் பெரியவா ஸ்ரீ சங்கர விஜயேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகளும் தங்களுடைய பரிபூரண அனுக்ரகத்தைத் தெரிவித்துள்ளார்கள். இப் பெரியவர்களின் ஆசிகளையே மூலதனமாகக் கொண்டு உலகெங்கிலுமுள்ள பக்தகோடிகள் தரப் போகும் சிறிய பெரிய காணிக்கைகளைக் கொண்டு இந்த ''பெரியவா சதாப்தி மணி மண்டபம்'' எழும்புகிறது. அயோத்தி ராமனுக்கு அன்று உதவிய அணில் போன்று ஏழை எளியோர் எல்லோருமே இதற்குப் பொருளுதவி அளித்திட வேண்டும் என்பதே எம் அவா. கொடுத்திடும் தொகை ஒரே ரூபாயாக இருப்பினும் குருபக்தி அதற்குப் பெருமை சேர்ப்பதால், அதை உடனே தந்து உதவிட முன்வர வேண்டும் - மகா பெரியவா அருளாசியால் வாழ்வில் எல்லா நன்மங்களங்களையும் பெற இதை ஒரு அரிய வாய்ப்பாகக் கருதித் தந்திட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். அணி அணியாய்த் திரண்டு மணியார்டரிலும் அனுப்பலாம். காசோலை, டிமாண்டு டிராப்ட் என்றும் காணிக்கைகளைக் குவித்திடலாம். வருமான வரிச் சட்டம் 80 'ஜி' பிரிவின்படி வருமான வரி விலக்கும் காணிக்கைகளுக்கு உண்டு.

''ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மகாலக்ஷ்மி மாத்ருபூதேஸ்வர் டிரஸ்ட்'' என்கிற பெயருக்கு நிதி சேர்க்கும் முகவரிகள் :

1. 'கடம்' வித்வான் ஸ்ரீ டி.எச். விநாயகராம், 74, பிள்ளையார் கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

2. ஸ்ரீ சி. ஆர். ரவிச்சந்திரன், 57, கிருஷ்ணன் கோவில் தெரு, சேலம் - 636 001.

3. ஸ்ரீ வி. ராமரத்னம், 104, துலிப்ஸ் அபார்ட்மெண்ட்ஸ், 6-3-655, சோமாஜிகுடா, ஐதராபாத் - 500 482.

*(காஞ்சி மாமுனிவரை உலகினுக்கே தந்து வான் புகழ்கொண்ட தாயார் மகாலக்ஷ்மி அவர்களுடைய திருநாமத்தோடு தானே தாயாகிக் காத்தருளிக் கொண்டிருக்கும் நம் ஈசனார் திருப்பெயரையும் இணைத்து உருவானது இந்த ''டிரஸ்ட்'').*

சென்ற வாரம் இறுதியில் குறிப்பிடப்பட்ட குழந்தை நட்சத்திரம் யார் என்று ஊகிக்க முடியாதவர்களுக்கு விடை : ஸ்ரீதேவி.

★ ★ ★

'பார்த்தால் பசி தீரும்' படம் எடுத்து முடிந்ததும் ஒரு பிரச்னை முளைத்தது. அதில் சரோஜாதேவி, சாவித்ரி, நான் ஆகிய மூவருமே நடித்திருந்தோம். எங்களில் யார் பெயரை டைடிலில் முதலாகப் போட வேண்டும் என்ற கேள்வி எழுந்தது. சீனியாரிட்டிபடி பார்த்தால் என் பெயரைத்தான் முதலில் போட வேண்டும். ஆனால் அன்றைய டாப் ஹீரோயின் சரோஜாதேவி. சாவித்ரிக்கும் கிட்டத்தட்ட அவருக்கு இணையான புகழ் உண்டு.

சீனியரான என் பெயரைப் பின்னதாகப் போட, தயாரிப்பாளர் ஏ.வி. மெய்யப்ப செட்டியாருக்கும் சரி டைரக்டர் பீம்சிங்குக்கும் சரி மனம் ஒப்பவில்லை. பிரச்னைக்குத் தீர்வு கண்டவர் செட்டியார்தான்.

யார் மனத்தையும் புண்படுத்தாத வகையில் அமைந்தது அவர் தீர்வு. பின்னர் பல சந்தர்ப்பங்களில் அதே யுக்தியை வேறு திரைப்படத் தயாரிப்பாளர்களும் கையாண்டனர் :

'உங்கள் அபிமான நட்சத்திரங்கள் நடித்த...' என்று 'டைடில்' கொடுத்து விட்டு அதன் கூடவே அனைத்து நட்சத்திரங்களுடைய போட்டோக்களையும் திரையில் காண்பிக்கச் செய்தார் செட்டியார்!

கன்யாதானம் என்ற தெலுங்கு படத்துக்கு என்னைக் கதாநாயகியாக ஒப்பந்தம் செய்தார்கள். இந்தப் படம்தான் பின்னர் 'நானும் ஒரு பெண்' என்று தமிழில் எடுக்கப்பட்டது. அதில் கதையின் நாயகி கறுப்பு நிறம் கொண்ட பெண். 'கன்யாதான்' ஷூட்டிங்கின் போது தினமும் கன்னங்கரேல் என்று மேக்-அப் போட்டுக் கொண்டு நடிக்க வேண்டும். ஷூட்டிங் முடிந்து வீட்டுக்குப் போய் எண்ணெய் தடவி - ஊறி, மேக்-அப்பைக் கலைப்பதற்குள் போதும் போதும் என்று ஆகி விடும்! இந்தப் படத்தை ஹிந்தியில் எடுத்த போது என்னைப் போலவே அவஸ்தைப்பட்டவர் அதன் கதாநாயகியாய் நடித்த மீனாகுமாரி.

'கன்யாதானம்' படத்தைக் கூர்ந்து கவனித்தால் சில காட்சிகளில் மேக்-அப் சரியாகப் போடப்படாதது போல் தெரியும். படப்பிடிப்பின் போது பயன்படுத்தப்பட்ட மிகப் பிரகாசமான விளக்குகளின் சூடு காரணமாக, கறுப்பு 'மேக்-அப்' கரைந்து விட, அங்கங்கே என் ஒரிஜினல் நிறம் இலேசாய்த் தெரியும். ஆனால் அது வண்ணப் படம் இல்லை என்பதால் அந்தக் குறை பெரிதாகத் தெரியவில்லை.

'பர்வரிஷ்' என்ற ஹிந்தி படத்தைப் 'பார் மகளே பார்' எனத் தமிழில் எடுத்தார்கள் - 1963 இல். ஆஸ்பத்திரியில் குழந்தை மாறிப் போவதைக் கதைக் கருவாகக் கொண்ட இப் படத்தில் சிவாஜி ஹீரோ, நான் ஹீரோயின், எம்.ஆர்.ராதா, முத்துராமன், ஏ.வி.எம். ராஜன், சோ, விஜயகுமாரி, புஷ்பலதா ஆகியோருக்கும் அழுத்தமான பாத்திரங்கள்.

நெப்டியூன் ஸ்டுடியோவில் ஷூட்டிங். சிவாஜி, எம்.ஆர். ராதா, நான் எல்லோருமாக ஒரு மரத்தடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது மாநிறத்தில் பளிச்சென்ற தோற்றத்துடன் ஓர் இளம் பெண் அங்கு வந்தார். தன் பெயர் கீதா என்றும் சிலோனில் சட்டம் படித்து வருவதாகவும் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். சினிமாவில் நடிக்க அவர் விரும்புவதாகவும் தெரிந்தது.

கீதாவை நான் மீண்டும் சந்தித்த போது அவர் திருமதி எம். ஆர். ராதாவாகியிருந்தார்! பின்னர் நாங்கள் இருவரும் சிநேகிதிகளானோம். கீதாவுக்குப் பிறந்த பெண் குழந்தை ராதிகா, பெரிய நடிகையாக வருவாள் என்று அப்போது நாங்கள் நிச்சயமாக நினைக்கவில்லை!

சில வருடங்கள் கழித்து, ஒரு வழக்கில் சம்பந்தப்பட்டு எம்.ஆர். ராதா சிறை சென்றார். அப்போது 'கீதா தனியாக இருக்கிறாள்; அவளை அவ்வப்போது போய்ப் பார்த்து ஆறுதல் சொல்லு' என்று எனக்குத் தகவல் கூறி அனுப்பினார். நானும் அவ்வாறே செய்தேன்.

'பார் மகளே பார்' படத்தில் 'பூச்சூடும் நேரத்திலே போய் விட்டாயே...' என்று ஒரு பாட்டு. சோகம் இழைந்த அந்தப் பாடலைக் கேட்கும் போதெல்லாம் எனக்குப் பழைய நினைவுகள் நெஞ்சை நிறைக்கும். கண்களில் நீர் துளிக்கும்.

சோகமான பாத்திரமல்லாத வித்தி

# வித்தியாச வாய்ப்பு; கூடவே சோதனை!

யாசமான வேடங்களுக்கு நான் தொடர்ந்து ஏங்கிக் கொண்டிருந்த நேரத்தில் அதிர்ஷ்டக் காற்று சற்றே என் பக்கமாக வீசத் தொடங்கியது. இதற்கு நான் சிவாஜி கணேசன் அவர்களுக்குத்தான் நன்றி சொல்வேன்.

'புதிய பறவை' படத்தின் டைரக்டர் தாதா மிராஸி. அந்தப் படத்தில் வரும் சிங்கப்பூர் பெண்ணின் வேடத்தில் நடிக்க அவரிடம் என்னைச் சிபாரிசு செய்தவர் சிவாஜி கணேசன்.

''ஜானகியிடம் எப்போதுமே நவீனமும் நாகரிகமும் இருக்கும். சோக பாத்திரங்களில் நடித்துப் பழகிப் போனாலும் அவரால் 'புதிய பறவை' படத்தின் சிங்கப்பூர் பெண் வேடத்தைச் சிறப்பாகச் செய்ய முடியும்...'' என்றெல்லாம் விவரமாகக் கூறியிருந்தார் சிவாஜி. ஆனாலும் டைரக்டருக்கு முழு நம்பிக்கை வரவில்லை...

இதை உணர்ந்த சிவாஜி, ''ஜானகியை அந்த வேடத்தில் நடிக்கச் சொல்லி ஒருசில காட்சிகள் எடுத்து, ரஷஸ் போட்டுப் பார்ப்போம். உங்களுக்குத் திருப்தியாக இல்லையென்றால் வேறு யாரையாவது மாற்றிப் போட்டுக் கொள்ளலாம். அப்படிச் செய்ய நேர்ந்தால் ஜானகியின் மனம் வருந்தாதபடி விஷயத்தை எடுத்துச் சொல்வது என் பொறுப்பு...'' என்று தாதா மிராஸிக்கு யோசனை கூறினார். டைரக்டரும் இதற்குச் சம்மதித்தார்.

முதல் நாள் படப்பிடிப்பின் போது ஒரு பாடல் காட்சி ஷூட் செய்ய ஏற்பாடு. 'பார்த்த ஞாபகம் இல்லையோ...' என்ற பாட்டுதான் அது.

படப்பிடிப்புத் தளத்தினுள் நான் நுழைந்த போது லைடிங் அட்ஜஸ்ட்மென்ட் செய்து கொண்டிருந்தார்கள். டைரக்டர் என்னிடம் பாடல் காட்சி பற்றி விளக்கினார். காஸ்டியூமர் அந்தக் காட்சிகளில் நான் அணிய வேண்டிய உடையைக் கொண்டு வந்து கொடுத்தார்.

மிக நவீனமான முறையில் வடிவமைக்கப்பட்டிருந்த அந்த உடையைப் பார்த்ததுமே என் மனத்தில் ஏகப்பட்ட சந்தோஷம். இத்தனை நாளாக வழக்கமான புடைவையில் தோன்றி சோக பாத்திரங்களிலேயே நடித்து வந்த என் இமேஜையே அந்த உடை மாற்றிவிடும் என்று உணர்ந்தேன். 'நவீன உடையில் நவீனமான பாத்திரங்களில் என்னால் நடிக்க முடியும் என்பதை நிரூபிக்க இதோ ஒரு சந்தர்ப்பம்...' என்று மனம் சந்தோஷத்தில் மிதந்தது.

மேக்-அப் முடிந்து அந்த உடையை அணிந்து, செட்டினுள் நுழைந்தேன். என்னையே கவனித்துக் கொண்டிருந்த சிவாஜி கணேசன் கூப்பிட்டார். 'உடை பொருத்தமாக இருக்கிறது' என்று பாராட்டப் போகிறாராக்கும் என்ற ஆவலில் சென்ற எனக்குப் பெருத்த ஏமாற்றம்.

டைரக்டரும் சிவாஜி கணேசனும் மனத்தில் உருக்கொடுத்தது போல் என் தோற்றமும் 'மேக்-அப்'பும் அமையவில்லை என்று தெரியவந்தது.

அரை மணி நேரம் அவகாசம் கேட்டேன். மீண்டும் மேக்-அப் அறைக்குச் சென்று ஹேர்-ட்ரெஸ்ஸர் ஜோஸஃபீன், உதவியாளர் லட்சுமி ஆகியோருடன் கலந்தாலோசித்தேன். காஸ்ட்யூமில் சிற்சில மாற்றங்கள் செய்து மீண்டும் அணிந்து செட்டுக்குப் போனேன்...



✱ கன்யாதானம்

ஊம்ஹூம்! இப்போதும் டைரக்டர் முகத்திலோ சிவாஜி முகத்திலோ முழு திருப்தியின் அடையாளம் இல்லை.

''சரி இன்னைக்கு ஷூட்டிங்கை கான்ஸல் செய்து விடலாம்'' என்றார் தாதா மிராஸி.

''இன்னும் ஒரு மணி நேரம் 'டைம்' கொடுங்க சார்.... என் வீடு வரை போய் வருகிறேன்'' என்று சொல்லி விட்டு, என்னால் ஷூட்டிங் தாமதமாவதற்கு வருத்தம் தெரிவித்து விட்டுப் புறப்பட்டேன்...

(தொடரும்)

# சௌகார் ஜானகி

படம் உதவி : ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

# கிராமவாசிகளே தொப்பி அணியுங்கள்!

கிராமப்புறங்களில் வசிப்பவர்களுக்குத்தான் அதிக அளவு காடராக்ட் பாதிப்பு இருக்கிறது. கண்களுக்கு எந்தவிதப் பாதுகாப்பும் இன்றி, சூரிய ஒளிக்கதிரை நாள் முழுக்க அவர்கள் பார்க்க நேரிடுவதால், அதிலிருந்து வெளியாகும் இன்ஃப்ரா ரெட் கதிர்கள் அவர்கள் விழிகளைத் தாக்கு

● கண்காட்சியில் மாணவர்கள்



கின்றன. மெக்ஸிகோ. [illegible] நாடுகள் [illegible]ற்றி லும் விவசாயிகள், வட்டமான அகன்ற தொப்பி அணிவதால் முகத்தில் நிழல் விழுகிறது. அவர்கள் கண்கள் பாதிக்கப்படுவதில்லை. இந்தியாவில் மட்டும் காடராக்ட் அறுவைச் சிகிச்சைக்காக ஒன்பது மிலியன் பேர் காத்திருக்கிறார்களாம்!

பரங்கிமலை அருகே அமைந்துள்ள எலைட் ஆப்டோ மெட்ரி பயிற்சி நிலையத்தில்தான் இத் தகவல் கிடைத்தது. சங்கர நேத்ராலயா நடத்தும் இந்த நிலையம் இந்தியாவில் இருக்கும் இரண்டு பள்ளிகளில் ஒன்று. (இன்னொன்று தில்லி AIIMSல் இருக்கிறது.)

''ஆனால் இரண்டுமே எந்தப் பல்கலைக் கழகத்தின் அங்கீகாரமும் பெற்றதல்ல!'' என்கிறார் இந்தப் பள்ளியின் முதல்வர் டாக்டர் வைத்தியலிங்கம்.

ஆப்டோமெட்ரி என்றால் என்ன?

கண் பார்வைக் கோளாறுகளைச் சரிப்படுத்தவும், கண்ணாடிகள் அணிவிக்கவும் முறையாக அளிக்கப்படும் பயிற்சிதான் 'ஆப்டோமெட்ரி'. இது நான்கு வருட கோர்ஸ்.

ஒரு நாள் முழுதும் நடந்த 'ஆப்டோமெட்ரி' கண்காட்சியில், சுற்று வட்டாரத்திலிருந்து வந்திருந்த அத்தனை பேருக்கும் இலவச கண் பரிசோதனை செய்தார்கள். வளாகம் முழுக்க, கண் நோய்கள், கண் நோய்த் தடுப்பு முறைகள் பற்றிய விளக்கங்கள். இலவச மூக்குக் கண்ணாடி ஃபிரேம் கூட பலருக்கு வழங்கினார்கள்!

● சூரியனை வணங்கும் போது, கண்ணை மூடிக் கொள்ளவும். (அதிகாலைச் சூரியனை மட்டுமே நேரிடையாகப் பார்க்கலாமாம்.)

● கிரகண சூரியனை நேரே பார்த்தால், பிறகு கண் குருடுதான்.

● கண்ணுக்கு விடும் சொட்டு மருந்துகளை மருத்துவரின் ஆலோசனைக்குப் பிறகே உபயோகியுங்கள்.

● கூரான விளையாட்டுக் கருவிகளைக் குழந்தைகளி[illegible]ம் தராதீர்கள்.

● அழுதால் கண்கள் சுத்தமாகும்; விழித்திரை வழுவழுப்பாகும்.

எனப் பொதுவான குறிப்புகள் தரப்பட்டன.

''நியூஸ் பேப்பர் படிக்க என்று 200, 300 ரூபாய் செலவழித்துத் தனிக் கண்ணாடி போட வேண்டாம்! விளக்கு இணைந்த பூதக் கண்ணாடி, பிடியுடன் கிடைக்கிறது. 75 ரூபாயிலிருந்து 100 ரூபாய்க்குள்தான் விலை. டெலிபோன் டைரக்டரியில் எண் பார்க்கவும், விலாசம் பார்க்கவும் கூட இது போன்ற கண்ணாடி பொருத்திய அட்டைகள் கிடைக்கின்றன'' என்கிறார் டாக்டர் வைத்தியலிங்கம்.

– எஸ்.வி.என்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.


பல தேசப்
பெருமைகளை
முகத்திலே பிரதிபலிக்கும்
பேரெழில் பெண்மணி
க்யூடிகூராவின் மூன்று இண்டர்நேஷனல் ப்யூட்டி டால்க்குகள். உலகின் சிறந்த நறுமணங்கள் நிரம்பியவை. பட்டுப்போன்று மென்மையானவை. உங்கள் முகத்திற்குப் பேரெழில் சேர்ப்பவை. பல தேசங்களின் பெருமைகளின் சிறப்பை உங்கள் முகத்தில் பிரதிபலிக்கச் செய்பவை.
Cuticura International Lavender Mist
Cuticura Springfresh
Cuticura International Classic
Cuticura
International
BEAUTY TALCS
...tra Leo Burnett B MP 10/93 - TAM

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka



W-4